# மிதிலைச் செல்வி




கலைவாணிக் கழகம் புதுக்கோட்டை

# மிதிலைச் செல்வி

[கழகத்தின் மூன்ருவது மலர்]

ஆசிரியர் :

ப. நீலகண்டன்



பதிப்பாளர்கள் :

கலைவாணிக் கழகம்

புதுக்கோட்டை

1943

## பதிப்புரை

கம்ப இராமாயண வெளியீட்டில் இது இரண்டாவதாகும். கம்பனை அனைவரும் படிக்கத்தக்க முறையில் இனிய எளிய நடையில் வெளியிட வேண்டுமென்று விரும்பியே கோசலைச் செல்வனை வெளியிட்டோம். கோசலைச் செல்வனுக்குத் தமிழர் தந்த பெரும் ஆதரவு எங்களுக்கு மிக்க மகிழ்ச்சியை யளிக்கிறது. இப்பொழுது மிதிலைச் செல்வி வெளிவருகிறாள். மூன்றாவது வெளியீடாகிய வெற்றித் திருமணத்தில் இருவரும் ஒன்று சேர்வர். தமிழர்களின் அன்பும் ஆதரவும் தேவை.

கலைவாணிக் கழகத்தார்

புதுக்கோட்டை.

# உ ள் ளு றை



# ப. நீலகண்டன்

கோசலைச் செல்வன், இன்பப் பொழில்,
இன்ப வாழ்வு, நாசிப் பெண், உன் கடமை,
மிதிலைச் செல்வி, மல்லிகைத் தோட்டம்

முதலிய நூல்களின் ஆசிரியர்

# கோசலைச் செல்வன்

## கம்ப இராமாயணம் ஆரம்பம்முதல் இராமாவதாரம் வரை

## சுருக்கம்

### 1. கம்பன்

கம்பன் கவிச் சக்ரவர்த்தி. தெய்வப் புலவன். தமிழில் தலையாய கவி.

**அம்பிலே சிலையை நாட்டி அமரர்க்கன்(று) அமுதம் ஈந்த**
**தம்பிரான் என்னத் தானும் தமிழிலே தாலை நாட்டிக்**
**கம்பநா டுடைய வள்ளல் கவிச்சக்ர வர்த்தி பார்மேல்**
**நம்புபா மாலை யாலே நரருக்கின்(று) அமுத மீந்தான்.**

முற்காலத்தில், திருமால் மந்தர மலையைக்கொண்டு திருப் பாற் கடலைக் கடைந்து விண்ணுலகத்தவரான தேவர்கட்கு அமுதம் வழங்கினர். அத்திருமாலைத் தலைவனுகக் கொண்ட கம்பன்—தன் தலைவனைப்போலத், தமிழ்த் திருப்பாற்கடலிலே, தன் நாவாகிய மந்தர மலையைக்கொண்டு கடைந்து, தற்காலத்தில் இந்நிலவுலகி லுள்ள அனைவருக்கும் அமுதத்தை உண்டாக்கிக் கொடுத்தான். நமக்கெல்லாம் அமுதம் பருகும் பாக்கியத்தை யளித்தவன் கம்பன். இன்றுள்ளவர்கள், இனி வருபவர்கள் அனைவரும் என்றென் றைக்கும் இந்த அமுதத்தைப் பருகலாம். உண்டவர்கள் மீண்டும் மீண்டும், நவில்தொறும் நவில்தொறும் இதை அள்ளிப் பருகலாம். இறைக்க இறைக்கச் சுரக்கும் அமுதக் கடலைத் திறந்து விட்டுவிட் டான் கம்பன். அவன் வள்ளல், அவன் பிறருக்கு அமுத மீந்து அமரனுனன்.

## வணக்கம்

**உலகம் யாவையுந் தாமுள வாக்கலும்**
**நிலைபெ றுத்தலு நீக்கலு நீங்கலா**
**அலகி லாவிளை யாட்டுடை யாரவர்**
**தலைவ ரன்னவர்க் கேசர ணுங்களே.**

கவி, தான் எடுத்துக்கொண்ட நூல் இனிது நிறைவேறக் கடவுளை வணங்குகிறான்; ஆக்கல், காத்தல், அழித்தல் மூன்று காரியங்களும் இறைவனுக்கு விளையாட்டுக்களாம். அப்படிப்பட்ட இறைவனுக்கு நாங்கள் அடைக்கலம்.

## அவை யடக்கம்

ஆசை வெட்க மறியாது என்று சொல்வார்கள். மலைப்பைத் தரக்கூடிய காரியமாயிருந்தாலும், அதைச் செய்யவேண்டுமென்ற ஆசை தோன்றிவிடுமானால், அந்தக் காரியம் சக்திக்கு மீறியது என்பதைக்கூட எண்ணாமல், அதில் இறங்கிவிடுகின்றோம். ஆசை; அதற்கு அடுத்தது நம்பிக்கை; பின்னர் உறுதி; இவை ஏற்பட்டவுடன் அநேகமாகக் காரியம் வெற்றி பெற்று விடுவதுண்டு. பின்னால், காரியத்தைச் சாதித்துவிட்ட நாமே, "இந்தச் செய்கை இவ்வளவு வெற்றிகரமாகவும் விரைவாகவும் முடியுமென்று நான் எதிர்பார்க்கவில்லையே" என்று ஆச்சரியப்படுகிறோம். கம்பனும் தன்னைப்பற்றி இப்படித்தான் எண்ணிக்கொண்டான் என்று தெரிகிறது. அழகான உதாரணத்தின் மூலம் கம்பன் கூறுகின்றான்.

**ஓசை பெற்றுயர் பாற்கடல் உற்றொரு**
**பூசை முற்றவும் நக்குபு புக்கென**
**ஆசை பற்றி அறையலுற் றேன்மற்(று) இக்**
**காசில் கொற்றத்து இராமன் கதையரோ.**

பாற்கடல்—கொந்தளித்துக் குமுறும் கடல், பெரும் அலைகள் எழுந்து மடிந்து சுருள்கின்றன. இதைக் கண்டது கம்பன் என்ற பூனை. ஆசை பிறந்துவிட்டது. கொஞ்சம் அருந்தினால்கூட அதற்குத் திருப்தி ஏற்படாது! கடல் முழுமையும் குடித்துவிட எண்ணிற்று அந்தப் பூனை! அப்படியே நக்கிக் குடித்துவிடத் துணிந்து கடலிலும் புகுந்துவிட்டது. என்ன துணிச்சல் இந்தப் பூனைக்கு? கடலின் சிதறிவிழும் திவலைகூட இந்தப் பூனையை இழுத்துக் கொண்டு போய்விடுமே. அலையே மோதிவிடுமானால் கேட்கவா வேண்டும்? இந்த அபாயங்களை யெல்லாம் எண்ணிப் பார்க்கவில்லை **ஆசை**. 'அம்மாதிரி ஆசையின் காரணமாக இராமன் கதையைச் சொல்லத் தொடங்கினேன்' என்கிறான் கம்பன்.

# 2. மழை வெள்ளத்தோடு பெருகும் கலை வெள்ளம்

## (ஆற்றுப் படலம்)

ஐம் பொறிகளை அடக்கி அனுபவிப்பதுதான் இன்பம் என்பதைக் கம்பன் கூருமற் கூறுகின்ருன். அதை அடக்கி ஆளா விட்டால் அந்தப் பாணங்கள் அவனையே திரும்பிக் கொன்றுவிடும் என்பதும் இங்கே நினைவுபடுத்திக்கொள்ள வேண்டியதாகும்.

பெண்களுடைய கண் — அது போர்த் தொழில்கொண்ட அம்பு. இந்த அம்புக்கு இரையாகாம விருக்கவேண்டுமே! ஐம் பொறி அம்புகளும் கண்ணம்பும், சிறிதுகூட சன்மார்க்கத்திற்குப் புறம்பாகச் செல்லாத கோசல நாட்டை அலங்கரிக்கின்ற **சரயூ** நதியின் அழகைக் கூறுகின்றேன் என்று ஆரம்பிக்கிருன்.

**ஆச லம்புரி ஐம்பொறி வாளியும்**
**காச லம்பு முலையவர் கண் எனும்**
**பூச லம்பு நெறியின் புறஞ் செலாக்**
**கோச லம்புனை யாற்றணி கூறுவாம்.**

பெரும் வெள்ளத்திலிருந்து ஒரு நதி பிரிகிறது. அந்த நதி எங்கே, எப்படிப்பட்டது என்பதைப் பாருங்கள் :

**இரவி தன்குலத்(து) எண்ணில்பல் வேந்தர்தம்**
**புரவு நல்லொழுக் கின்படி பூண்டது**
**சரயு என்பது தாய்முலை அன்ன(து) இவ்**
**உரவு நீர்நிலத்(து) ஓங்கும் உயிர்க்கெலாம்.**

[இரவி - சூரியன்; பரவு - புகழ்தற்குரிய; பூண்ட்து - மேற்கொண்டதாகிய; உரவு நீர் - உலாவும் தன்மையுள்ள கடல்]

சூரிய குலத்தில் பிறந்த எத்தனையோ அரசர்கள் பரம்பரையாகக் கோசல நாட்டை நெறி பிறழாது ஆண்டு வருகின்ருர்கள். இவர்கள் நல்லொழுக்கத்தின் எடுத்துக் காட்டாக விளங்குகின்ருர்கள். அவர்களது ஒழுக்கத்திற்கு நதியை ஒப்பிடுகின்ருன் கம்பன். இப்படிப்பட்ட நல்லவர்களின் நாட்டை வளஞ்செய்யும் பாக்கியத்தைப் பெற்றது சரயூ நதி. உலகத்தை உண்டாக்கிக் காத்து ரட்சிக்கும் 'உலகோம்பும்' தாய்களுக்கு உதாரணமாகச் சொல்கின்ருன். 'சரயு என்பது தாய்முலை அன்னது' இதைவிட அழகாகவா நதியின் முக்கியத்துவத்தையும் சிறப்பையும் கூற முடியும்?

# 3. அமரன் சிருஷ்டித்த அற்புத நாடு
## (நாட்டுப் படலம்)

என்ன அற்புதம்! வயல்களின் வரப்புக்களிலெல்லாம் முத்துக்கள். தண்ணீர் தாவிப்பாயுந் தன்மையுள்ள மதகுகளிலெல்லாம் சங்குகள். வாய்க்கால்களின் செய்கரைகளிலெல்லாம் பொற்கட்டிகள். எருமைகள் வீழ்ந்து புரளும் குழிகளிலெல்லாம் மலர்க்குவியல். பரம்படித்துச் சமமாக்கிய இடங்களிலெல்லாம் பவழங்கள். செந்நெற் பயிரினிடையே அன்னப் பறவைகள். கரும்புகளிலெல்லாம் செந்தேன்.

**வரம்பெலா முத்தந், தத்து மடையெலாம் பணில மாநீர்க்**
**குரம் பெலாஞ் செம்பொன் மேதிக் குழியெலாங் கழுநீர்க் கொள்ளை**
**பரம்பெலாம் பவளஞ், சாலிப் பரப்பெலாம் அன்னம், பாங்கர்க்**
**கரும் பெலாஞ் செந்தேன் சந்தக் காவெலாம் களிவண் டீட்டம்.**

[தத்து - தாவிப் பாய்தல்; மடை - மதகு; பணிலம் - சங்கு: குரம்பு - (நீர்ப்) பெருக்கு; மேதி - எருமை; கழுநீர்க் கொள்ளை - மலர்க் குவியல்; பரம்பு - பரம்படித்துச் சமப் படுத்திய; சாலி - நெல்; பாங்கர் - பக்கம்; கா - சோலை.]

பெரிய கண்களையும் பிறைபோன்ற நெற்றியையுமுடைய அழகுத் தெய்வமாகிய பெண்களெல்லாம் கல்வி அறிவு நிரம்பியவர்கள். அழகும் கல்வியும் போதுமா? குணமும் இருக்கிறது. இன்னும் செல்வமும் இருக்கிறது; ஏராளமான செல்வம்; நிலை பெற்ற செல்வம். அம்மகளிரின் நெடும்பொழுது கேட்டவர்க்கு இல்லை யென்னாது வழங்குவதிலும், விருந்தினர்களையும் நண்பர்களையும் உபசரித்து மகிழ்வதிலுமே கழிகிறது.

**பெருந்த டங்கண் பிறைநுத லார்க்கெலாம்**
**பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்,**
**வருந்தி வந்தவர்க்(கு) ஈதலும் வைகலும்**
**விருந்து மன்றி விளைவன யாவையே?**

[நுதல் - நெற்றி; வைகலும் - தினந்தோறும்]

அந்த வளநாடு எப்படி செல்வத்தின் சிகரமாக விளங்குகிறதோ அப்படியே ஒழுக்கத்தின் எடுத்துக் காட்டாகவும் மிளிர்கிறது.

வர்த்தகத்திற்குச் சென்று திரும்புகிற மரக்கலங்கள் பொன்னையும் மணியையும் குவிக்கின்றன. நிலத்தின் வளமோ கற்பனைக்

கும் எட்டாத செழிப்புடையது. சுரங்கங்களிலிருந்து நவரத்தினங்கள் ஏராளமாக எடுக்கப்படுகின்றன. அவரவர்கள் பிறந்த குலம் நல்ல ஒழுக்கத்திற்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறது. ஒழுக்கத்தினல் பிறந்த குலத்தின் பெருமை அதிகரிக்கிறது.

**கலம்சு ரக்கும் நிதியம் கணக்கிலா**
**நிலம்சு ரக்கும் நிறைவளம் நன்மணி**
**பிலம்சு ரக்கும் பெறுதற்(கு) அரியதம்**
**குலம்சு ரக்கும் ஒழுக்கம் குடிக்கெலாம்**

[கலம் - மரக்கலம்; பிலம் - கனிகள் அதாவது சுரங்கம்].

எவ்வளவு சிறப்பான நாடு அது! அங்கே ஒரு வேடிக்கை! அந்த நாட்டிலே கொடையாளிகளே கிடையாது. என்ன, என்ன! கொடையாளிகளே கிடையாதா? ஆமாம். கிடையாதுதான். அது மட்டுமா! 'இவர் வீரர்' என்று எடுத்துக் காட்டுவதற்கு ஒருவர்கூடக் கிடையாது. இன்னும், இவர்கள் உண்மையானவர்கள் என்று சிலரையாவது சொல்லமுடியுமா? முடியாது. பிறகு, மேதை என்று குறிப்பிடுவதற்கு விரல்விட்டு எண்ணத்தக்க சிலர் கூடக் கிடையாது. அப்படியா! ஆமாம். கம்பன்தான் இப்படிக் கூறியது. நீங்களே பாருங்கள்.

**வண்மை யில்லைஓர் வறுமை யின்மையால்,**
**திண்மை யில்லைநேர் செறுநர் இன்மையால்,**
**உண்மை யில்லைபொய் உரையி லாமையால்,**
**ஒண்மை யில்லைபல் கேள்வி மேவலால்**

[வண்மை - கொடைச் சிறப்பு; திண்மை - வலிமை; நேர்செறுநர் - எதிர்த்துப் போர் செய்வோர்; ஒண்மை - கல்வி அறிவுமிக்க]

உண்மைதான்: வறுமையே இல்லையென்ருல், கொடை எதற்கு? எதிர்த்துப் போர் செய்வோர் கிடையாது. யுத்தம் இருந்தாலல்லவா வெற்றிபெற்றவன் வலிமையுடையவன் என்று கூற முடியும். யாராவது பொய் பேசினல்தானே உண்மை பேசுவோர்க்குப் புகழ் இருக்கும். எல்லோரும் உண்மை பேசினல்? ஆஹா! எல்லோரும் மேதைகள். யாரைத்தான் சிறப்பாகக் கூறமுடியும்?

## 4. ஞான பூமி
## (நகரப் படலம்)

**க**ம்பனின் வள்ளல் தன்மையிலிருந்து எழுந்த கோசல நாட்டின் இராஜதானி அயோத்தி. எதிர்கால உலகம் எப்படி இருக்க வேண்டுமென்று அவன் கண்ட கனவின் தோற்றம் அது.

**பொன்திணி மண்டப(ம்) அல்ல, பூத்தொடர்**
**மன்றுகள் அல்லன, மாட மாளிகை ;**
**குன்றுகள் அல்லன, மணிசெய் குட்டிமம் ;**
**முன்றில்கள் அல்லன, முத்தின் பந்தரே,**

[பொன்திணி - சுவர்ணத்தால் வலிமையாகக் கட்டப்பட்ட; மன்றுகள் - பலர்கூடும் மண்டபங்கள் ; குட்டிமம் - தலங்கள் : முன்றில்கள் - முற்றங்கள்.]

சுவர்ணத்தால் கட்டப்பட்ட வலிமையான மண்டபங்கள், மலர்களால் அமைக்கப்பட்ட மாடங்கள். பலர் கூடுமாறு அமைக்கப்பட்ட கூடங்கள், உப்பரிகைகளோடு கூடிய மாட மாளிகைகள், செய்குன்றங்கள், இரத்தினம் பதித்த தளங்கள், முத்துக்கள் வேய்ந்த முற்றங்கள், எங்கு நோக்கினும் இப்படிப்பட்ட காட்சிகள் தான் அங்கே.

இளம் பெண்களது குதலைச் சொற்கள் வேய்ங்குழலின் இன்னிசை கானத்தை ஒத்திருக்கின்றன. மங்கைப் பருவ மகளிரது மழலை மொழிகள் மகர யாழின் நாதத்தைப் போலிருக்கிறது. மடந்தையரின் சொற்கள் இனிய கானத்தின் எல்லையைக் காட்டுகின்றன. இவர்களது பேச்சு இப்படி, இவர்கள் பாடவே ஆரம்பித்துவிட்டால்! அப்படியே மெய்ம்மறந்து போகிறோம். உடல் புளகாங்கிதமடைகிறது. இன்பக் கடலில் திளைக்கிறோம்.

**குழலிசை மடந்தையர் குதலை, கோதையர்**
**மழலையங் குழலிசை மகர யாழிசை**
**எழிலிசை மடந்தையரின்சொல், இன்னிசை**
**பழையர்தம் சேரியிற் பொருநர் பாட்டிசை.**

[குழலிசை மடந்தையர் - அப்பொழுதுதான் மயிர்முடிகூடப் பெறுகிற இளம் பெண்கள் ; பழையர் - கள் விற்பவர்கள் : பொருநர் - கூத்தர்கள்.]

சேரியிலுள்ள கூத்தர்களுடைய பாட்டு இனிய கீதத்தை ஒத்திருக்கிறது.

**தெள்வார் மழையும் திரையாழியும் உட்கநாளும்**
**வள்வார் முரசம் அதிர்மாநகர் வாழு மாக்கள்**
**கள்வா ரிலாமைப் பொருட்காவலு மில்லை, யாதுங்**
**கொள்வா ரிலாமைக் கொடுப்பார்களுமில்லை மாதோ.**

(தெள்வார்மழைஉம் - தெளிவான நீரைச் சொரிகின்ற மேகங்களும் ; திரையாழி - அலைகளையுடைய கடல் ; உட்க - அஞ்சும்படி : முரசம அதிர் - பேரிகைகள் ஒலிக்கின்ற)

கற்கவேண்டியவைகளை விட்டுப் பொழுது போக்கமாட்டார்கள் அயோத்தி மக்கள். எனவே அங்கு கல்வி இல்லாரில்லை. கல்வி வல்லவர்களுமில்லை, எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் பெற்றிருக்கிறார்கள்.

# 5. அரசு முறை
## (அரசியற் படலம்)

அன்பிலே தசரதர் தாய்க்குச் சமானமானவர். விரும்பிய நலத்தை யெல்லாம் செய்வதில் தவத்தை ஒத்தவர். பொதுமக்களை நற்கதியில் சேர்க்கும் அரிய பணியைத் தலைமேற் கொண்டதால் அரசர் புத்திரனுகவுமானார். தீய வழியில் செல்வோரைத் தண்டிப்பதால் நோயாகவுமானார். அவர்களைத் தண்டித்து நல்வழிப்படுத்துவதால் மருந்துமானார். அரிய பொருள்களை ஆராயும் தன்மையிலே அறிவின் சொரூபமானார்.

கம்பன் தாய்க்குலத்தின்மீது கொண்டிருந்த ஒப்பற்ற பக்தியை இப்பாட்டின் சிகரமாக வைத்திருக்கிறான் :

தாயொக்கும் அன்பின் ; தவமொக்கும்
    நலம்பயப்பின் ;
சேயொக்கும், முன்நின்(று)
    ஒருசெல்கதி உய்க்கும் நீரால்,
நோயொக்கும் என்னின்,
    மருந்(து) ஒக்கும் ; நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால், அறி(வு) ஒக்கும்
    எவர்க்கும் அன்னான்.

[பயப்பின் - அளித்தல் ; சேய் - புத்திரன் : ஒரு செல்கதி - ஒப்பில்லாத செல்லுதற்குரிய நற்கதி ; நீரால் - தன்மையினால் : நுணங்கு - (சூக்குமமான) நுண்ணிய.]

தசரதர் தன் இராஜ்யத்தை எப்படிப் பாதுகாத்தார் என்று கம்பன் சொல்வதைக் கேளுங்கள் :—

எய்யென எழுபகை எங்கும் இன்மையால்,
மொய்பெருத் தினவுறு முழவுத் தோளினான்
வையக முழுவதும் வறிஞன் ஓம்பும்ஓர்
செய்யெனக் காத்(து) இனி(து) அரசு செய்கின்றான்.

[எய்யென - அம்பை என்மீது எறி என்று வீரவாதம் செய்து ; எழு பகை - வருகின்ற பகை ; மொய்பெருத்தினவு - போரைப் பெறாமல் தினவு மிகுந்த ; முழவுத்தோள் - மத்தளம்போலத் திரண்டுருண்ட தோள்கள் ; வறிஞன் - தரித்திரன் ; செய் - சிறுகழனி.]

மிகவும் தரித்திர நிலையில் உள்ள ஒருவன். அவனுக்கு ஒரே ஒரு சிறு கழனி. அதைக் கொண்டுதான் அவன் ஜீவனம் நடத்த வேண்டும். அந்தச் சிறு கழனியை அவன் அவ்வளவு போற்றிப்

பாதுகாப்பான்? களை எடுத்து நீர்ப் பாய்ச்சி எவ்வளவு உழைப்பான். மற்றவர்களை ஏவவும் மாட்டான். காரணம் அவன் ஏழை, ஒரே ஒரு கழனிதான். இரவும் பகலும் அதைக் கண்போலக் காப்பானல்லவா? அப்படி உலகத்தைத் தசரதர் காத்து வருகிறார். மக்கட்குத் தொண்டு செய்வதைத் தவிர அரசனுக்கு வேறு வேலையில்லை. பகைவரே கிடையாது. எதிரியை நினைத்துக் கலங்க வேண்டியதில்லை. அல்லது நாடு பிடிக்கத்தான் கவனம் செலுத்த வேண்டுமா? அதுவும் கிடையாது. எனவே ஒரு கழனி மாதிரி ஆண்டார்.

தசரதரின் ஆட்சியை இதைவிட அழகாகக் கூற முடியுமா? கவிஞனின் கனவு ஒரே கவியில் பரிபூரணத்துவம் பெற்று மிளிர்கிறது.

## 6. அருணோதயம்

### (திரு அவதாரப் படலம்)

அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆனந்தமாகக் கழித்துவிட்டார். பிள்ளைகள் இல்லை என்ற ஒரே குறைதான். சந்ததிவேண்டுமே என்கிற ஆசையாலல்ல அவர் பிள்ளை இல்லையே என்று குறைப்படுவது. தனக்குப் பின் இப்பூவுலகத்திற்குத் தொண்டு செய்ய ஒருவன் வேண்டுமே என்றுதான் கவலைப்படுகிறார்.

புத்திரன் பிறப்பதற்குரிய யாகத்தைச் செய்யுமாறு கூறுகிறார் வசிஷ்டர்.

யாகம் நிகழ்ந்தது. மகிழ்ச்சியிலே பொன்னையும் மணியையும் அள்ளி அள்ளி வழங்கினார். தேவையுள்ளவர்கள் வேண்டிய அளவு எடுத்துக் கொள்ளும்படி பொக்கிஷத்தைத் திறந்து வைத்துவிட்டார்!

**கருமுகில் கொழுந்து எழில்**
**காட்டும் சோதியை**
**திருவுறப் பயந்தனள்**
**திறங்கொள் கோசலை.**

கோசலையினிடத்தே இராமன் பிறந்தான். கைகேசி பரதனை ஈன்றெடுத்தாள். சுமித்திரை லட்சுமணனையும் சத்துருக்கனனையும் பெற்றாள்.

நகர மாந்தர்கள் எப்படியெல்லாம் களிப்புக் கொள்கிறார்களென்று பாருங்கள்.

ஆர்த்தனர் முறை முறை
யன்பினால் உடல்
போர்த்தன புளகம், வேர்
பொடித்த நீள்நிதி
தூர்த்தன(ர்) எதிர் எதிர்
சொல்லினார்க்கெலாம்.
தீர்த்தன் என்(று) அறிந்ததோ
அவர்தம் சிந்தையே.

[ஆர்த்தனர் - ஆரவாரித்தார்கள்; போர்த்தன புளகம் - (உடலை) சந்தோஷம் மறைத்தது; வேர் பொடித்த - வியர்வை நீர்த்துளி அரும்பின; நீள்நிதி - மிகுந்த திரவியத்தை; தூர்த்தனர் - அள்ளிக்கொடுத்தார்கள்; தீர்த்தன் - திருமால்.]

குமாரர்கள் வளர்ந்து கலைகளைக் கற்கும் வயதினை யடைந்தனர். வசிஷ்டரே குரு. அரசர்க்குரிய கலைகள் யாவையும் உணர்ந்தனர்.

இராமனும் இலக்குமணனும் நெய்கின்ற குழலுடனே விடாது பொருந்திய நூல் இழைபோல்சேர்ந்திருந்தனர். பரதனும் சத்ருக்கனும் இணைபிரியாதிருந்தனர்.

இராமனுக்கு நகரத்தவர்மீது அளவு கடந்த பற்றுதல், அவர்களுடைய நலனை விசாரிப்பதிலே அக்கரை.

எதிர்வரும் அவர்களை
எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின் முகமலர்
ஒளிரா,
'எதுவினை? இடரிலை?
இனிதுறும் மனையும்
மதிதரு குமரரும் வலியர்
கொல்?' எனவே.

[முதிர்தரு - மிக்க; ஒளிரா - ஒளிர்ந்து; வினை - தொழில்; மனை - மனைவி; மதிதரு - அறிவுபெற்ற; வலிமைகொல் - வலிமையுடையவராயிருக்கின்றனரா?; எனவே - என்று கேட்க.]

ஒரு இளவரசன், நாளை அரசனாக வேண்டியவன், எப்படிப் பட்ட மனத்தினனாயிருக்க வேண்டுமென்று கவிஞன் கூறுகின்றான். அவன் வீரனாதலாலே பிள்ளைகள் வீரமுடையவரா யிருக்கிறார்களா என்று வினவுகிறான். இராமனைக் கருணையின் வடிவமாக சிருஷ்டித்திருக்கிறான் கம்பன்.

*அஃதுஐய, நினையெம(து)*
*அரசென உடையேம்*
*இஃதொரு பொருளல ;*
*எமது(உ)யி ருடன்ஏழ்*
*மகிதல முழுதையும்*
*உறுகவி மலரோன்*
*உடுபகல் அளவென*
*உரைநனி புரிவாய்.*

[இஃது ஒரு பொருளல்ல - ஒரு குறையுமின்றி வாழ்தல் பெருங்காரியமன்று ; உறுக - ஆட்சிசெய்க ; மலரோன் உடுபகல் அளவு - பிரமன் அழியுங்காலம் மட்டும்.]

"உன்னை அரசனுகைப் பெற்ற எங்கட்கு என்ன குறை? ஏழுலகத்தையும் எங்கள் உயிரையும் உலகம் அழியும் மட்டும் ஆட்சி செய்வாயாக!" என்று வாயார வாழ்த்திச் சொல்கிறுர்கள் பொதுமக்கள்.

# மிதிலைச் செல்வி

## 7. மூலகாரண முனிவர்

“இந்திர சபையோ?” என்று விண்ணுலகத்தவரே சந்தேகிக்கும்படி விளங்கியது, தசரதரின் இரத்தின கசிதமான சிங்காதனம் அமைந்த சபா மண்டபம். அவ்வளவு உயர்ந்தது. நினைத்துப் பார்க்கக்கூட முடியாத அபூர்வமான வேலைப்பாடுகள் நிதர்சனமாகத் தென்பட்டன. சபா மண்டபத்திலே மன்னர் நுழைந்தார். அப்பொழுது ஒரு தனிப் பொலிவைப் பெற்றது மண்டபம். தூய்மையும் மென்மையும் பொருந்திய சிங்காதனத்திலே அமர்ந்தார் இராஜ சிங்கம்.

அப்பொழுது அங்கு வந்து சேர்ந்தார் விசுவாமித்திர முனிவர். பிரம்மதேவனைக் கண்ட இந்திரனைப்போல தசரதர் விரைவாக எழுந்திருந்து வணங்கினர். அப்படி அவர் எழுந்தபோது, மார்பில் அணிந்துள்ள இரத்தின ஆரம் மின்னி சூரியனுடைய ஒளியையும் தோற்குமாறு செய்துவிட்டதாம்!

வணங்கிய தசரதர் பின் வருமாறு யோசிக்கிறார் :-

“மகா தபஸ்வியான இந்தப் பெரியவர் மிக எளிதாக எழுந்தருளி எனக்குக் காட்சி கொடுத்தாரே. தேடியலைந்து பெறவேண்டிய பாக்கியமல்லவா இது? இத்தேசம் செய்துள்ள தவமாகத் தானிருக்கும். இல்லை, நான் செய்துள்ள நல்வினையாக இருக்கலாம். நான் அவ்வளவு தவமா செய்திருக்கிறேன்? இல்லை, இல்லை. நான் அவ்வளவு பாக்கியம் செய்யவில்லை? ஆமாம். இந்தப் பேறு எம் குலத்தவர் தொன்று தொட்டுச் செய்துவந்த புண்ணியத்தின் பலன்தான்.”

இப்படி எண்ணி முனிவரிடமும் உபசாரமாகக் கூறுகிறார் :

'நிலஞ்செய்தவம் என்றுணரின் அன்று ; நெடியோய் ! என்
நலஞ்செய்வினை உண்டெனினும் அன்று ; நகர் நீயான்
வலஞ்செய்துவணங்கஎளி வந்தஇது, முந்(து)எம்
குலஞ்செய்தவம்' என்றினிது கூறமுனி கூறும்.

[நெடியோய் - பெரியோனே ; நகர்—(இந்) நகரத்தில் ; எளி வந்த - எளிதில் எழுந்தருளிய ; முந்து—முன்பு.]

மகிழ்ச்சியோடு கூறிய இவ்வுரையைக் கேட்ட முனிவர் தாமும் தசரதரைப் புகழ்ந்து கூறுகிறார் :

'என்அனைய முனிவரரும் இமையவரும்
இடையூறுஒன்(று) உடையரானால்,
பன்னகமும் நகுவெள்ளிப் பனிவரையும்,
பாற்கடலும், பதும பீடத்(து)
அந்நகரும், கற்பகநாட் டணிநகரும்,
மணிமாட அயோத்தி யென்னும்
பொன்னகரும் அல்லாது புகலுண்டோ?
இகல்கடந்த புலவு வேலோய் !

[அனைய — போன்ற ; முனிவரர் — ரிஷிசிரேஷ்டர்கள் ; இமையவர் — தேவர்கள் ; (பல் நகம்உம்) பன்னகமும் நகு — பல மலைகளையும் அவமதித்துச் சிரிக்கிற ; வரை — மலை ; பதும பீடத்து அந்நகர் — தாமரை மலரை ஆசனமாக உடையவனான பிரமனது சத்திய லோகம் ; கற்பக நாட்டு அணி நகரும் — கற்பக விருட்சத்தையுடைய சுவர்க்கலோகத்திலுள்ள அழகிய அமராவதி பட்டணமும் ; அணிமாடம் — அழகிய உப்பரிகைகளையுடைய ; புகல் உண்டோ — சரணமடைவதற்கு உரிய இடம் (வேறு) உண்டோ ; இகல் கடந்த — பகைவரை(ப் போரில்) வென்ற ; புலவு வேலோய் — (பகைவர்களது) தசை பொருந்திய வேலாயுதத்தை யுடையவனே.]

'வீரனே ! என்னைப்போன்ற ரிஷிகளுக்கும் தேவர்களுக்கும் ஏதாவது துன்பம் நேருமானால், அவர்களுக்குப் புகலிடமாயுள்ளவை கைலாசமும், பாற்கடலும், சத்திய லோகமும், அமராவதியும், அழகிய உப்பரிகைகளையுடைய உன்னுடைய அயோத்தியும்தானே ?'' என்கிறார் ரிஷி.

தம்முடைய காரியத்தை வெகு எளிதாகச் சாதித்துக் கொள்ளத்தான் இப்படிப் புகழ்மாலையைச் சூட்டுகிறார் முனிவர். "நிலவுலகத்தினர் எளிதில் அடையக் கூடியது அயோத்தியல்லவா? அதனால்தான் உன்னிடம் வந்தேன்" என்ற பொருளும் அவருடைய சொற்களிலே தொக்கு நிற்கிறதல்லவா?

இன்னும் புகழ் ஏணியின் உச்சி முகட்டில் கொண்டு போய் வைத்து விடுகிறார் தசரதரை.

முதலில் முனிவர்களுக்கும் தேவர்கட்கும் புகலிடம் அமராவதியும் அயோத்தியும் என்று சொன்னாரல்லவா? இப்பொழுது "அமராவதி மன்னன் இந்திரனுக்கே இடம் கொடுக்கும் அயோத்தி" என்றும் கூறுகிறார்.

[தண்டகாரண்யத்தில் வசித்து வந்தவனும் மாயைகளில் தேர்ந்தவனுமான சம்பரன் என்ற அசுரன் தேவர்களுடன் போர்தொடுத்து வென்றான். பொன்னுலகைப் பறித்துக்கொண்டு இந்திரனை விரட்டிவிட்டான். பின் வாங்கிய இந்திரன் தசரதரிடம் சரணடைந்து உதவி வேண்டினான். தசரதர் கைகேயியையும் அழைத்துக் கொண்டு இந்திரனுக்கு உதவியாக யுத்தத்தில் கலந்து கொண்டார். அசுரனைச் சுற்றத்துடன் அழித்து அரசாட்சியை மீட்டுக் கொடுத்துவிட்டார்.]

இதை நினைவு படுத்திக்கொண்ட முனிவர் "இன்று இந்திரன் ஆள்வது, அன்று உன்னால் அளிக்கப்பட்டதல்லவா?" என்று பாராட்டிக் கூறுகிறார்.

'இன்தளிர்க்கற் பகநறுந்தேன் இடைதுளிக்கும்
நிழலிருக்கை இழந்து போந்து,
நின்றளிக்கும் தனிக்குடையின் நிழலொதுங்கிக்
குறையிரந்து நிற்ப, நோக்கிக்
குன்றளிக்கும் குலமணித்தோட் சம்பரனைக்
குலத்தோடும் தொலைத்து நீகொண்(டு)
அன்றளித்த அரசன்றோ; புரந்தரன் இன்(று)
ஆள்கின்ற(து) அரச! என்றான்.

[இன்தளிர் — இனிமையான துளிர்களையுடைய; நறுந்தேன் - வாசனை வீசுகின்ற தேன்; நின்று அளிக்கும் — நின்று காக்கும்;

தனி — ஒப்பற்ற; குன்று அளிக்கும் — பருவதத்தை ஒத்த; குலமணி — உயர்ந்த அழகிய மணி; தோள் சம்பரன் - புயங்களை யுடைய சம்பரனென்னும் அசுரன்; புரந்தரன் — இந்திரன்.]

இன்றைக்கு அடிமையாகக் கிடக்க வேண்டியவன் உன்னாலன்றோ அரச போகத்தில் வாழ்கின்றான் என்று மனமார வாயார வாழ்த்துகிறார். தசரதருடைய புய வலிமை, பிறர் நலத்தில் கவனம் செலுத்தும் பெருந் தன்மை, தியாக சிந்தை, இவைகளை யெல்லாம் முனிவர் பாராட்டுகிறார். "அசுரனும் இந்திரனும் அடித்துக் கொண்டு தொலையட்டும்" என்று தசரதர் இருந்துவிட வில்லையே. இந்திரன் இழந்ததை யுத்தம் செய்து மீட்டாரே, அதைத் தாம் வைத்துக்கொண்டாரா, அல்லது அதில் பங்குதான் கேட்டாரா? இழந்ததைப் பிடித்து அப்படியே தானம் செய்து விட்டாரல்லவா? இவை களை யெல்லாம் எடுத்துக் கூறி பெருமிதக் கடலில் மூழ் கடித்து விட்டார் தசரதரை.

வந்த காரியத்தை எப்படி முடித்துக்கொண்டு போவது என்பதை முனிவர் நன்றாக அறிந்திருக்கிறார். பலமான அஸ்திவாரத்தின்மீது அவர் அடுக்கிய சொற் சித்திரங்களும் புகழ் மாலைகளும் தசரதர் மேல் பாய்ந்து வேலை செய்ய ஆரம்பித்துவிட்டன. மகிழ்ச்சிக் கடலிலே மூழ்கிவிட்டார் மன்னர். உள்ளத்தில் பேருவகைக் கடல் பெருகுகிறது. எவராலும் அணைபோட முடியாது.

சிறிது நேரத்திற்கெல்லாம், புகழ்க் கடலில் மிதந்தவர் வெட்கமென்ற மரக்கலத்தால் மேலெழுந்தார். "அடி யேன் அப்படி ஒன்றும் பிரமாதமாகச் செய்துவிட வில்லையே. என் கடமையைத்தானே செய்தேன்? அதுவும் தங்களைப்போன்ற பெரியவர்களின் பலத்தினால் செய்ததுதான்" என்று அடக்கமாகக் கூறினார். முனிவர் ஏதோ காரியமாகத் தான் வந்திருக்கிறார் என்பதை உணர்ந்துகொண்டார் மன்னர். வணங்கி, "தங்கள் வருகையால், அரசாட்சி பெற்றதன் பயனைப் பெற்று விட்டேன். இனி நான் என்ன செய்ய வேண்டுமென் பதை அறிவிக்க வேண்டும்" என்று பணிவாகக் கேட்

-டார். இறைவனுக்கு முன்னே, உத்தரவை எதிர் நோக்கி நிற்கும் பக்தனைப் போலிருந்தது அவரது தோற்றம்.

உரைசெய்யு மளவில்அவன் முகம்நோக்கி
உள்ளத்தில் ஒருவ ராலும்
கரைசெய்ய அரியதொரு பேருவகைக்
கடல்பெருகக் கரங்கள் கூப்பி,
'அரசெய்தி யிருந்தபயன் எய்தினன், மற்(று)
இனிச்செய்வ தருளு?' கென்று
முரசெய்து கடைத்தலையான் முன்மொழியப்
பின்மொழியும் முனிவன் ஆங்கே.

[முரசு எய்து கடைத்தலையான் — பேரிகைகள் முழுங்குகிற தலைவாயிலை யுடையவரான தசரதச் சக்கரவர்த்தி.]

முனிவர் காரியார்த்தமாகத்தான் வந்திருக்கிறார் என்பதை தசரதர் உணர்ந்து "என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டாரல்லவா? இதையே எதிர்பார்த்திருந்த முனிவரும் கேட்டே விட்டார்.

மகிழ்ச்சியிலே மூழ்கி யிருக்கும் மன்னர் அடுத்த நிமிஷம் அளவிட முடியாத கவலையில் ஆழப் போகிறார் என்பதை அறிவாரா? முனிவர் சொல்கிறார் :

"தருவனத்துள் யான்இயற்றும் தகைவேள்விக்(கு)
இடையூருத் தவஞ்செய் வோர்கள்
வெருவரச் சென்(று) அடைகாம வெகுளியென
நிருதர்இடை விலக்கா வண்ணம்
செருமுகத்துக் காத்தி"..........

இதுவரை கேட்ட தசரதர் "ஓ! ரொம்ப எளிதான காரியத்தைத்தான் முனிவர் கேட்கிறார்!" என்று எண்ணினார். இந்த ஆண் சிங்கத்துக்கு, யாகத்துக்குத் தடையாக நிற்கும் அரக்கர்களைக் கொல்வதுதானா பிரமாதம்? இப்படி தசரதர் எண்ணும் பொழுதே

........என நின்சிறுவர்

என்றார் முனிவர். அப்பொழுது பிரம்மாண்டமான இடி இதயத்தைத் தாக்கிப் பயங்கரமான மின்னல் கண்களைப் பறித்தது போன்றிருந்தது. தன் நிலை தடுமாறி அடுத்து வருவதென்ன வென்பதைக் கூர்ந்து நோக்கினார் தசரதர்.

நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத்தந் திடுதி யென......

முனிவர் கேட்டார். அடுத்த விநாடி தசரதர் மூர்ச்சை யானார். இதை

.........உயிர்இரக்கும்
கொடுங்கூற்றின் உளையச் சொன்னான்,

என்று கம்பன் குறிப்பிடுகிறான்.

இப்பொழுது முழுப்பாட்டையும் பார்ப்போம்:

'தருவனத்துள் யான்இயற்றும் தகைவேள்விக்(கு)
இடையூறுத் தவஞ்செய் வோர்கள்
வெருவரச் சென்(று) அடைகாம வெகுளியென
நிருதர் இடை விலக்கா வண்ணம்
செருமுகத்துக் காத்தி யென நின்சிறுவர்
நால்வரினும் கரிய செம்மல்
ஒருவனைத்தந் திடுதி'' யென ; உயிர்இரக்கும்
கொடுங்கூற்றின் உளையச் சொன்னான்.

[தருவனம் - மரங்கள் அடர்ந்த காடு; தகைவேள்வி - சிறப்பையுடைய யாகத்துக்கு ; வெருவ - அஞ்சும்படி ; அடை காமம் வெகுளி-(முனிவர்களிடம்) போய்ச் சேருகிற காமக் குரோதங்கள் ; நிருதர் - அரக்கர் ; இடை - நடுவில் ; வில்க்காவண்ணம் - தடுக்காத படி ; செருமுகத்தில் - யுத்தத்தில் ; செம்மல் - புத்திரன் ; கூற்று - இயமன் ; உளைய - வருந்த.]

முனிவர் ஒரு பெரிய யாகத்தை ஆரம்பித்திருக்கிறார். அரக்கர்கள் யாகத்துக்கு இடையூறு செய்கிறார்கள். முனிவர்கள் அஞ்சும்படியான காமக் குரோதங்கள் போல அரக்கர்கள் வருகிறார்களாம். புறப்பகைவர்களான சுபாகு, மாரீசன் ஆகியவர்களை உட்பகைகளில் கொடியதான காமக்குரோதங்களாக, உதாரணம் காட்டப்பட்டதற்குக் காரணம் முனிவரின் அனுபவம்தான்! காமம், வெகுளி, மயக்கம் என்ற மூன்றினுள்ளே காமம் வெகுளியை சுபாகு மாரீசர்களுக்குக் குறிப்பிட்டாயிற்று. இவையிரண்டுக்கும் காரணமான மயக்கத்தை தாடகையாகக் கற்பிக்கிறான் கவிஞன். யாகம் செய்ய முற்பட்டவர் கோபம் கொள்ளலாகாது. ஆகையினால்தான் அரக்கர்

களைச் சபித்து அழித்துவிட முடியாது; "எனவே, உன் உதவி நாடினேன்" என்று கூறுகிறார் முனிவர்.

முனிவர் எங்கெங்கோ வளைத்து வளைத்துப் பேசி இப்படிக் கேட்பார் என்று தசரதர் எதிர்பார்த்தாரில்லை. முனிவரோ காரியத்தை இலகுவாக முடிக்க இப்படியெல்லாம் வளைத்து வளைத்துப் பேச வேண்டுமென்று முன்னாலேயே திட்டம் வகுத்துக் கொண்டுதான் வந்திருக்கிறார். ஏனெனில்,

> ஓவிய எழிலுடை ஒருவனை அலதோர்
> ஆவியும் உடலமும் இலதென அருளின்
> மேவினன் உலகுடை வேந்தர்தம் வேந்தன்.

[சித்தரித்தது போன்ற அழகையுடைய ஸ்ரீராமனை அல்லாமல் உயிரும் உடலமும் வேறில்லை யென சக்ரவர்த்தி எண்ணிக் காத்து வந்தார்.]

என்பது அவருக்குத் தெரியும். திடீரெனப் பிரவேசித்து "உன் மூத்த மகனைக் கொடுத்துவிடு" என்று எதிர் பாரா வகையில் கேட்டிருப்பாரானால் நிலைமை விபரீதமானதாகவும், பயங்கரமானதாகவும் ஆகி யிருக்கும். எவ்வளவோ சாமர்த்தியமாகத்தான் கேட்டார். 'கரிய செம்மல் ஒருவனைத் தந்திடு' என்ற சொல்லானது அரசரை ஆசனத்துடன் ஒரு குலுக்குக் குலுக்கியது. முனிவரை நோக்கினார். அங்கே முனிவர் இல்லை! கொடிய யமன். கட்டுத் தளராத தேகம் கட்டவிழ்ந்தது. இதயத்திலே பலமான இடி. இன்னதென்று வர்ணிக்க இயலாத 'உளைச்சல்'. சூலாயுதந் தாங்கிய யமன் எதிரே வந்து நின்று 'உன் உயிரைக் கொடு' என்று கேட்டால் எப்படி இருக்கும்? மார்பில் வேல் எறிந்ததனால் உண்டான பெரும் புண்ணில் கனல் (நெருப்புப் பந்தம்) நுழைந்தாற் போன்றிருந்தது தசரதருக்கு. துன்பம் பிடித்துத் தள்ள உயிரானது ஊஞ்சலைப் போல ஊசலாடுகிறது; போய்ப் போய் வருகிறது.

இந்த நிலையில் 'எனக்குப் பிள்ளைகள் ஏன் பிறந்தனர்?' என்று கேட்டுக்கொள்கிறார். குழந்தை இன்பத்தை யளித்து, இப்பொழுது பிடுங்குவதற்குக் குழந்தை

கள் இல்லாமலேயே இருந்திருந்தால், இத்துயரத்திற்கு ஆளாக வேண்டியதில்லையே.

பிறவிக் குருடன் கண்ணில்லாக் குறையைக் கருதியிருக்க மாட்டான், சுகபோகங்களைக் கண்டறியாத வறுமையில் பிறந்து வளர்ந்த தொழிலாளியைப்போல. திடீரெனக் கண்களைக் கொடுத்து உலக இன்பத்தை அனுபவிக்கும்பொழுது அவைகளைப் பறிப்ப தென்றால் எவ்வளவு கொடிய வேதனை. அளவிட முடியாத தண்டனை. எப்படிப்பட்ட பழி வாங்கும் தன்மை!

குழந்தைகளாகிய கண்களைப் பெற்ற தசரதர் அவைகளை இழக்கப் போகிறாரா? அப்படித்தான் அவர் எண்ணினார். ஒரு பொருளின்மீது அடங்காக் காதல் கொண்ட மனம் அந்தப் பொருளுக்குக் கேடு சூழ்ந்துவிடுமோ என்று அடிக்கடி எண்ணித் தவிப்பது இயற்கைதானே!

[இதே சமயத்தில் அரசருக்குப் பழைய கதையின் நினைவு மீண்டும் தோன்றிவிட்டது. தசரதரால் புத்திரசோகமடைந்த கண் இல்லாதவரான முனிவர் தம் மனைவியுடன் தீக்குதித்து உயிர்விடும்போது "நீயும் எம்மைப்போல மகப் பிரிவினால் துயரம் மேலிட்டு இறப்பாய்" என்று இட்டசாபம் நினைவுக்கு வந்ததும் தன் முடிவுகாலம் வந்துவிட்டதென எண்ணினார் தசரதர்.]

மூர்ச்சையாகி ஊசலாடுகிற அவருடைய நிலையைப் பாருங்கள்:

எண்ணிலா அருந்தவத்தோன் இயம்பியசொல்,
மருமத்தின் எறிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையிற் கனல்நுழைந்தால்
எனச்செவியிற் புகுத லோடும்,
உண்ணிலா வியதுயரம் பிடித்(து) உந்த
ஆருயிர் நின்(று) ஊச லாடக்
'கண்ணிலான் பெற்றிழந்தான்!' எனஉழந்தான்
கடுந்துயரம் கால வேலான்.

[எண்ணிலா - அளவில்லாத; மருமம் - மார்பு; (புண்ணில்) ஆம் - உண்டான; புழை - துவாரம்; உண்ணிலாவிய; உள் நிலாவிய - மனத்தில் உண்டான; உந்த - (பிடித்துத்) தள்ள; ஊசல் - ஊஞ்சல்; உழந்தான் - துன்பப்பட்டான்; காலவேலான் - (பகைவர்க்கு) யமனை ஒத்த வேலாயுதத்தை யுடையவன்.]

இப்படி நேருமென விசுவாமித்திரர் யோசித்தாரில்லை. மண்டபத்திலே மௌனம் குடிகொண்டிருந்தது.

"கண்ணிலான் பெற்றிழந்தான் என உழந்தான் கடுந் துயரம் காலவேலான்" என்பதைப் பலமுறைப் பாடி நயத்தை அனுபவிக்க வேண்டும்.

சிறிது நேரத்திற்குப் பின் மெல்லிய தொனியில் தசரதர் பேசினர்:

"முனி சிரேஷ்டரே! இராமன் சிறுவன். போர்ப் பயிற்சி இல்லாதவன். வேள்வியைக் காக்கவேண்டுமென் பது தங்கள் கட்டளையாயின் இதோ நான் வருகின்றேன். இடையூறாக எவர் வரினும் தோற்கடிப்பேன். சிவனே வந்தாலும், அல்லது பிரமன், இந்திரன் யார் வந்தாலும் இடையூற்றுக்கு இடையூறா யிருந்து நான் காப்பேன்."

இப்படிச் சொன்னல் முனிவர் சமாதானமடைவார் என்பது தசரதர் கருத்து.

ஆனல், முனிவர் பெருங்கோபத்துடன் எழுந்தார். புருவங்கள் மேலேறின. கண்கள் சிவந்தன, பயங்கரச் சிரிப்புச் சிரித்தார். மோனத்தைக் கிழித்துக்கொண்டு நாலாபுறமும் ஒலியும் எதிரொலியுமாகியது. கட்டிடமே அதிர்ந்து விடுவது போன்ற ஆட்டம், சூரியன் மறைந் தான். எல்லாம் நிலைபெயர்ந்து சுழன்றன. திக்குகள் இருண்டன. 'இறுதிக் காலமோ?' என்று எண்ணினர் தேவர்கள்.

இனியும் மௌனமா யிருந்தால் விபரீதம் ஏற்பட்டு விடுமென்று உணர்ந்தார் வசிஷ்டர். அவர் விசுவாமித் திரரை நோக்கி, 'தயை செய்து பொறுமையோடிருங் கள்' என்று கூறிவிட்டுத் தசரதரைப் பார்த்துக் கூறு கிறர்.

"இது

**உறுத்தலாகலா உறுதி எய்தும்நாள்.**

[அடைவித்தற்குக் கூடாத பெரும் நன்மைகள் (தாமாக)வந்து சேருகிற நாள்.]

"எதிர்பாராவகையில் எண்ணற்ற நலன்களை அடையப் போகிறான் இராமன். இதை மறுக்கலாமா?" என்று கேட்டார்.

வசிஷ்டர் மகா தபஸ்வி. தசரதரின் குலபதி. அறவழி காட்டும் அண்ணல். நடைபெற இருப்பவைகளை ஞானக் கண்ணால் கண்டார். மேலும் சொல்கிறார்:

"மழையினால் பல வெள்ளங்கள் தோன்றுகின்றன. அவை விரைந்து சென்று கடலில் கலக்கின்றன. அதைப் போல இராமனை அளவற்ற வித்தைகள் வந்தடையும் காலம் இது. அட்டியின்றி அனுப்புக!"

"பெய்யு மாரியால் பெருகு வெள்ளம்போய்
மொய்கொள் வேலைவாய் முடுகும் ஆறுபோல்,
ஐய! நின் மகற்(கு) அளவில் விஞ்சைவந்(து)
எய்து காலமின்(று) எதிர்ந்தது" என்னவே.

[மொய்கொள் - பெருமை பொருந்திய; வேலைவாய் - கடலிலே; முடுகும் ஆறுபோல் - விரைந்து சேரும் விதம்போல; விஞ்சை - வித்தை; எய்து - சேரும்; எதிர்ந்தது - நேர்ந்தது]

கடலிலே எவ்வளவு வெள்ளங்கள் கலந்திருக்கின்றன என்று கணக்கிடமுடியாது. கடலைப்போல அவ்வளவு வித்தைகளையும் அகத்துள் அடக்கும் ஆற்றல் படைத்தவன் இராமன் என்பதைக் கூறுகிறார் வசிஷ்டர்.

இதைக் கேட்டதும்தான் மன்னர் மகிழ்ச்சி கொண்டார்.

"குருவின் வாசகங் கொண்டு கொற்றவன்
* திருவின் கேள்வனைக் கொணர்மின்,

என்றான்" என்று கம்பன் கூறுகிறான். சக்கரவர்த்தியின் செல்வங்கட்கும் இராச்சியத்துக்கும் உரியவன் மூத்த மகன் என்பதை எண்ணித்தான் தசரதர் "திருவின் கேள்வன்" என்று குறிப்பிட்டிருக்க வேண்டும். சீதா கல்யாணம் சமீபித்தது என்ற மங்கல மொழியே இப்படிப் பரிமளிக்கிறது!

---

* இலக்குமி கணவனான ஸ்ரீராமனை.

இராமன் இலக்குமணனுடன் வந்து சேர்ந்தான்.

இருவரையும் முனிவரிடம் ஒப்புவித்து சக்ரவர்த்தி கூறுகிறார் :

"ஐய! இவர்கள்தாம். இவ்விளங்குமரர்க்கு தந்தையும் நீங்கள், தாயும் நீங்களே. இதோ தந்தேன், ஏற்றுக் கொள்ளுங்கள். உங்கள் அடைக்கலம், ஆவன செய்யுங்கள்!"

முனிவர் இராமனைத்தானே கேட்டார். தசரதர் இலக்குமணனையும் அனுப்புகிறாரே ஏன்? முதலில் மறுத்து விட்ட குற்றத்திற்குப் பரிகாரமாகப் போலும்! அவர்களைப் பிரிக்கவும் முடியாதே இவர்களால்!

கம்பன் அமரன். அறத்தைச்சொல்ல வந்தவன். கவிப் பிரமன். எந்தெந்த வழிகளிலெல்லாம் அறத்தைச் சொல்ல முடியுமோ-நீதிநெறியைப் புகட்டமுடியுமோ அந்தந்த வழிகளிலெல்லாம் கூறியிருக்கிறான்.

இராமன் விசுவாமித்திரனுடன் புறப்படுகிறான். வெற்றி ஒன்றையே காணப்போகின்ற உடைவாள் இடப் புறத்திலே ஜொலிக்கிறது. குன்றுகளைப் போன்ற இரண்டு தோள்களிலும் அம்பறாத்தூணிகளைக்கட்டிக்கொண்டான். உண்மைக்கு என்றாவது அழிவுண்டா? இவ்வுலகுள்ளள வும் நிலைத்து நிற்கும் மெய்மைபோல், என்றும் எடுக்க எடுக்கக் குறையாத அம்பறாத்தூணிகளாம் அவை. எவ்வளவு சுலபமாக அறத்தைச் சொல்கிறான்! இடக் கையிலே வில்லைத் தாங்கினான். பகைவர்களை வேரறுக்கப்போகிறோ மென்கிற மகிழ்ச்சியினால் போலும் மணிகள் கணகணவென்று ஒலிக்கின்றன!

வென்றி வாள்புடை விசித்து, மெய்ம்மைபோல்
என்றும் தேய்வுறாத் தூணி யாத்(து), இரு
குன்றம் போன்றுயர் தோளிற் கொற்றவில்
ஒன்று தாங்கினான், உலகம் தாங்கினான்.

[வென்றி - வெற்றி; புடை - புறத்தில்: விசித்து - கட்டி; யாத்து - கட்டி; கொற்றம் - வெற்றி.]

வில் ஒன்றைத் தாங்கினவன் யார்? உலகம் தாங்கினவன். உலகத்தைத் தாங்கத்தான் வில்லைத் தாங்கினான்.

இராமனைப்போலவே இலக்குமணனும் வில் வாள் முதலியவற்றை அணிந்துகொண்டான். மூவரும் புறப்பட்டனர். முனிவரின் நிழல்போல் இருவரும் செல்கின்றனர்.

சரயூ நதியை யடைந்தனர். பின் கங்கையைக் கடந்து அழகிய சோலையிலே இன்பமாகத் தங்கினர்

---

## 8. காருத்தன் கன்னிப் போர்

அன்று இரவை ஆனந்தமாகக் கழித்துவிட்டு மறுநாள் பகல் ஒரு பாலை வனத்தை யடைந்தனர்.

கொடிய பாலைவனம். சூரியன், நிலத்திலுள்ள நீரை உறிஞ்சிவிட்டு உமிழ்ந்த சக்கைபோல் இருக்கிறது. அவன் வெற்றி விருதுகொண்டு சஞ்சரிக்கின்ற வெயிற்காலத்தைத் தவிர வேறொரு காலத்தைக் கண்டிராத பாலைவனம். அக்னிதேவனே, இந்தப் பாலையை நினைப்பானாயின் அவன் உள்ளம் வெந்து போகும்! பார்ப்பானாயின் கண்கள் கருகிவிடும்!

இந்த நிலமானது எப்பொழுதும் கொதித்து கொண்டே இருக்கிறதென்பதற்கு ஒரு உதாரணம்: போர் முகத்தில் வஞ்சனையால் தோல்வியுற்ற வீரனின் நெஞ்சு எப்பொழுதும் தாபந்தணியாமலே இருக்கும். அந்த நெஞ்சும் வெப்பம் தணியாத இந்தப் பாலையும் ஒன்று என்கிறான் கவிஞன்.

போர் முகத்தே நேர் நின்று வெற்றியோ தோல்வியோ ஒன்றைப் பெறுதல் வீரர்க்கு இயல்பு. அதில், தோற்றதன் காரணமாக மானமிழந்த வருத்தம் இருக்குமேதவிர, வஞ்சனையால் வீழ்த்தப்பட்ட கொதிப்பு இராதல்லவா? அந்த வரண்ட பாலைவனத்தைக் காட்டி எவ்வளவு உயர்ந்த நீதியைப் புகட்டுகிறான் கவிஞன்!

இப்பொழுது அந்தப் பாலையை உங்கள் முன் கொண்டு வந்து நிறுத்துகிறான் பாருங்கள்.

கண்ணுக்கெட்டிய தூரம் வரை கனல். பேய்க் காற்று; தீக்காற்று. பேய் உடல் பிளந்தது போன்ற, வைர மேறிய பெருங்கள்ளியின் பிளவுபட்ட அடிப்பாகம். உலர்ந்த மூங்கில் மரங்கள். நீர் இன்மையால் எங்கும் பூமி பிளந்து கிடந்தது வெடிப்புக்களின் வழியாக வெந்தணல் பாதாளலோகத்திற்குக் கூடச்செல்லுமோ என்னும்படியா யிருந்தது. சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால்—'ஏகவெங் கனல் அரசிருந்த'—அந்தப் பாலை, அக்கினித்தேவனின் ஏகபோக ஆட்சியிலிருந்தது என்று சொன்னால் போதும்!

நல்வினை தீவினை இவைகளை ஒழித்து, காமம், வெகுளி, மயக்கம் இம்மூன்று கொடிய பகை மதில்களைக் கடந்து மோட்சத்தையடைய விரும்பிய ஞானியின் மனம் பசை யற்றிருக்கும். ஞானியின் மனம் போலவே 'பொன்விலை பாவையர்' மனமும் பசையற்றிருக்கும். இவ்விருவர் மனம் போலவே பாலை பசை யற்றிருந்ததாம்!

பாலையைப் பார்த்த இராமனுக்கு ஒரு சந்தேகம். "இந்தப் பாலை கொடுங்கோல் அரசனுடைய நாட்டை விட அதிகமாக அழிந்திருப்பதற்குக் காரணம் என்ன? முக்கண்ணனின் நெற்றிக்கண்ணால் வெந்ததோ? வேறு காரணமுண்டோ?" என்று வினவினான்.

இராமனுடைய கேள்விக்கு விசுவாமித்திரர் தாடகை யின் வரலாற்றைச் சொல்லுகிறார். அவளாலேயே வனம் இப்படி அழிந்து போயிற்று என்றும் கூறி அவளை அறி முகப்படுத்துகிறார்!

மண்ணுருத்(து) எடுப்பினும், கடலை வாரினும்;
விண்ணுருத்(து) இடிப்பினும், வேண்டிற் செய்கிற்பாள்;
எண்ணுருத் தெரிவரும் பாவம் ஈண்டியோர்,
பெண்ணுருக் கொண்டெனத் தெரியும் பெற்றியாள்.

[மண் உருத்து - கோபம் கொண்டு பூமியை; வாரின் உம் - முகந்து பருக வேண்டுமானாலும்; விண் உருத்து - மேலுலகத்தைக்

கோபித்து; செய்கிற்பாள் - செய்து முடிக்கும் வல்லமையுள்ளவள்; எண் உரு தெரிவு அரு பாவம் - அளவும் உருவமும் அறிய முடியாத பாவங்கள்; ஈண்டி - (ஒருங்கு) திரண்டு; பெற்றியாள் - தன்மையுள்ளவள்.]

அவள் பெண்தான்; ஆனால் கணக்கிலடங்காத பாவங்கள் ஒருங்கு சேர்ந்து பெண்ணுருவாகி யிருக்கின்றன. அவளுடைய பராக்கிரமம் அதைவிடப் பெரிது. அவள் விரும்பினால், மண்ணையும் எடுப்பாள், விண்ணையும் இடிப்பாள், கடல் நீர் முழுமையையும்கூடக் குடிப்பாள்.

பெருவரை இரண்டொடும், பிறந்த நஞ்சொடும்,
உருமுறழ் முழக்கொடும், ஊழித் தீயொடும்
இருபிறை செறிந்(து) எழு கடல் உண் டாமெனின்
வெருவரு தோற்றத்தள் மேனி மானுமே!

[வரை - மலை; உரும் உறழ் - இடியோசை; வெருவரு - அஞ்சக்கூடிய; மானும் - ஒக்கும்.]

தாடகை எப்படி இருப்பாளென்பதற்கு உதாரணம் விஷம், பெரிய இரண்டு மலைகள், இடியோசை, பிரளய காலத்து அக்னி, இரண்டு பிறைச் சந்திரன்கள், இவைகளோடு கூடிய கடல் எழுந்து நடந்து வருமானால் எப்படி யிருக்குமோ அப்படி யிருப்பாள் அவள்!

[அவளுடைய செம்பட்டைத் தலைமயிர், கண்கள், வக்கிர தந்தங்கள், கர்ஜிக்கும் தன்மை, தனங்கள் இவை கடலுடன் சம்பந்தப்பட்ட வடவைத் தீ, விஷம், சந்திரன், அலை ஓசை, மலை இவைகளுடன் ஒப்பிடப் பட்டிருக்கின்றன.]

அவள் பெயர் என்ன?

சூடக அர(வு)உறழ் சூலக் கையினள்,
காடுறை வாழ்க்கையள், கண்ணிற் காண்பரேல்
ஆடவர் பெண்மையை அவாவும் தோளினாய்!
தாடகை என்பதச் சழக்கி நாமமே.

[சூடகம் - (கங்கணம்) வளையல்; அரவு - நாகம்; உறழ் - பொருந்திய; உறை - வசிக்கிற; அவாவும் - விரும்பும்; சழக்கி - கொடியவள்.]

இராமனுடைய பால் வடியும் வதனத்தை ஏறிட்டுப் பார்த்து, கொடிய அரக்கியைப்பற்றிக் கவனமாகச்

சொல்லிக் கொண்டு வரும்பொழுதே, அவனுடைய எல்லை யற்ற அழகைப் பருகி வெளியிலும் சொல்லும்படியான நிலை ஏற்பட்டுவிட்டது பாருங்கள்! அதுவும் முனிவருக்கு! இராமனுடைய தோள் எவ்வளவோ அழகானது. அதைப் பார்க்கிற ஆடவர்கள், "நாம் பெண்ணாக மாறி அந்தத் தோளைத் தழுவமாட்டோமா?" என்று எண்ணும்படி யான அவ்வளவு அழகு! ஆடவர் தம் மனத்தினால் மகளிர் தன்மையை யடைந்து விடுகிறார்களாம்!

தம்முடைய காரியத்தைச் சாதித்துக்கொள்ள முனி வர் இப்படி யெல்லாம் சொல்கிறார் என்று கூறமுடியாது. அந்தப் பேரழகின் ஒளி அவரை வசீகரிக்கிறது!

அந்த அரக்கி எவ்வளவு கொடியவள் என்பது, பெரிய நாகத்தை வளையலாக அணிந்திருப்பதிலிருந்தே தெரிகிற தல்லவா? அவள் கையிலே சூலாயுதமிருக்கிறது. கொடிய நாகம் படம் எடுத்தது போன்ற தலையையுடையது அது.

"இந்த இடம் ஏன் இப்படியாயிற்று?" என்று இராமன் கேட்டான். அந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல வந்துவிட்டார் விசுவாமித்திரர். "இவள் ஒருவளே வளம் நிறைந்த மருத நிலத்தை இப்படியாக்கிவிட்டாள்" என்று முனிவர் சொல்லப் போகிறார். "இவள் ஒருவளாகவேவா இப்படிச் செய்து விட்டாள்?" என்று இராமனுக்கு ஒரு சந்தேகம் வரலாம். எனவே அதற்கும் சேர்த்தே ஒன்றாகப் பதில் சொல்கிறார்.

ஒருவனிடம் எவ்வளவோ நல்ல குணங்கள் இருக்க லாம். அவனிடம் உலோப குணம் ஒன்று மட்டும் இருக்கு மானால், நல்லவை அவ்வளவும் அழிந்து போகும். அவ னுடைய உள்ளமும் ஈரப்பசையற்ற பாலையாகிவிடும். அதைப்போல உலோபகுணம் மாதிரி தோன்றிய அரக்கி வளம் நிறைந்த மருத நிலத்தை மண்ணாக்கித் தொலைத்தாள்.

உளப்பரும் பிணிப்பறு உலோபம் ஒன்றுமே
அளப்பரும் குணங்களை அழிக்கு மாறுபோல்
கிளப்பரும் கொடுமைய அரக்கி, கேடிலா
வளப்பரு மருதவைப்(பு) அழித்து மாற்றினாள்.

[உளப்பரு பிணிப்பு அரு - மனத்திலே பந்தம் நீங்காத; உலோபம் - துர்க்குணம்; அழிக்குமாறு - அழியச் செய்யும் விதம்போல; கிளப்பரு - சொல்லுதற்கு முடியாத; வளப்பரு மருதம் வைப்பு - வளம் நிறைந்த பெரிய மருத நிலம்.]

விசுவாமித்திரர் மேலும் சொல்லுகிறார்:

முன்னுல(கு) அளித்துமுறை நின்றஉயி ரெல்லாம்
தன்னுயிர் எனக்கருது தன்மையினன் மைந்த!
என்னினி உணர்த்துவ(து) இனிச்சிறிது நாளில்
மன்னுயிர் அனைத்தையும் வயிற்றினில்இடும் என்றான்.

[முன் உலகு அளித்து - பழமையான உலகத்தைக் காத்து; முறை நின்ற - சன்மார்க்கத்தில் நின்ற;]

"சன்மார்க்கத்தில் நிற்பவர்களது உயிர்களை யெல்லாம் தன் உயிர் எனக் காத்து வருகின்ற சக்ரவர்த்தியின் குமாரனே! அவளைப் பற்றி இன்னும் சொல்ல என்ன விருக்கிறது? இவளை இப்படியே விட்டு வைத்தால் எல்லா உயிர்களையும் வயிற்றிற்குள் அடக்கி ஏப்பம் விட்டு விடுவாள்!"

"நல்ல உயிர்கள் இவளால் கொல்லப்பட்டு விடும் என்பது ஒருபுறம். இன்னும் எவ்வளவோ உயிர்களைக் கொன்று மேலும் பாவத்தைச் சுமக்காமல் இப்பொழுதே இவளைக் கொன்றுவிட வேண்டுமென்பது மற்றொருபுறம். விசுவாமித்திர முனிவரின் கொலைபுரிய வேண்டுமென்கிற கட்டளைக்கு, ஜீவகாருண்யமே காரணமென்பதைக் கம்பன் கூறாமற் கூறுகிறான்.

மலர்மாலை யணிந்த முடித்தலையை "அப்படியா?" என்று அசைத்து, "அந்தக் கொடியவள் எங்கே இருக்கிறாள்?" என்று கேட்டான், திருமாலாக இருந்தபோது சங்குதாங்கிய கரத்திலே இப்போது வில்லைத் தாங்கிய இராமன். "இதோ இந்த இடத்தில்தான் அவள் இருக்கிறாள்" என்று சொல்கிறார் விசுவாமித்திரர். அடுத்து என்ன நிகழ்ந்தது என்பதைப் பாருங்கள்!

கைவரை எனத்தகைய காளையுரை கேளா
ஐவரை அகத்திடை அடைத்தமுனி 'ஐய!
இவ்வரை இருப்பதவள்' என்பதனின் முன்(பு) ஓர்
மைவரை நெருப்பெறிய வந்ததென வந்தாள்.

[கைவரை எனத்தகைய - துதிக்கையையுடைய மலைபோன்ற யானை; (என்று சொல்லத்தக்க, கம்பீரத்தையுடைய ராமன்) கேளா - கேட்டு; ஐவரை - பஞ்சேந்திரியங்களை; இவ்வரை - இந்த மலை; மைவரை - கரிய மலை.]

அவள் எப்படிப்பட்டவள், எப்படி வந்தாள் என்பதைக் கவியிலேயே பாருங்கள். சப்த ஜாலங்களைக் கவியிலே காட்டுகிறான் கவிஞன். இந்தக் கவி எவ்வளவு நாடகப் பண்புடன் அமைக்கப்பட்டிருக்கிறது! இந்த மலைக்குள்தான் அவள் இருக்கிறாள் என்று சொல்வதற்கு முன்னே அவள் வந்துவிட்டாள், ஒரு பெரிய எரிமலை புரண்டு வருவதுபோல!

அவளுடைய தோற்றத்தைப் பாருங்கள்!

இறைக்கடை துடித்தபுருவத்தள்? எயி(று) என்னும்
பிறைக்கடை பிறக்கிட மடித்தபில வாயள்
மறைக்கடை அரைக்கிவட வைக்கனல் இரண்டாய்
நிறைக்கடல் முளைத்தென நெருப்பெழ விழித்தாள்.

[இறை - சிறிது; கடை - நுனி; எயிறு - கோரப்பல்; பிறை - சந்திரன்; கடை - கடைவாய்; பிறக்கிட - வெளியே தெரியும்படி: பிலம் - குகை: மறைக்கடை - சன்மார்க்கத்திற்குப் புறம்பாகிய; வடவைக் கனல் - வடவா முகாக்கினி; நிறைக்கடல் - நீர் நிறைவையுடைய கடல்.]

அக்னி ஜ்வாலை வீசுகின்ற மலைதான். ஆனால் கல் மலையல்ல; மாமிசமலை. கரிய நிறம், அலங்கோலமாக விரிந்து புரளும் செம்பட்டை மயிர். கோரப் பற்கள் பிறைச் சந்திரர்களைப்போல் கடைவாயில் வெளியே தொங்குகின்றன. கடல் போன்ற கரிய முகத்தில் வடவைக் கனல் இரண்டு போன்று நெருப்பைக் கக்கிக்கொண்டிருந்தன கண்கள். அவளுடைய காலிலே கிடந்த சிலம்பில், பெரிய பெரிய மலைகள் மணிகளாகக் கட்டித் தொங்கவிடப்பட்டிருந்தன! அவள் பாதம் பட்ட இடமெல்லாம் பெரும் பெரும் பள்ளங்கள் உண்டாகிவிட்டன. அவள் நடந்து

வருகிற வேகத்திலே பக்கத்திலுள்ளவை யெல்லாம் இடம் விட்டுப் பெயர்ந்து அலை மோதுகின்றன !

அவளுடைய தோற்றமும் வருகையும் இப்படி. குரல்?

கடக்கரும் வலத்(து)எனது காவல்(இ)தில் யாவும்
கெடக்கரு அறுத்தனன் இனிச்சுவை கிடக்கும்
விடக்(கு) அரி(து) எனக்கருதி யோ?விதிகொ(டு) உந்தப்
படக்கருதி யோபகர்மின் வந்தபரி(சு) என்றே.

[கடக்க அரும் வலம் - எவராலும் கடக்க முடியாத பலத்தை யுடைய; சுவை கிடக்கும் விடக்கு - இனிமை பொருந்திய மாமிசம்; கொடு - கொண்டு; உந்த - பிடித்துத்தள்ள; பட - இறக்க; பரிசு - விதம்]

"வார்த்தை உரை செய்தனள் இடிக்கும் மழை அன்னாள்"

தாடகை மூவரையும் பார்த்து ஏளனச் சிரிப்புச் சிரித்தாள். கையிலுள்ள சூலாயுதமாகிய கொடிய யமனைப் பார்த்தாள். அருமையான உணவு கிடைத்துவிட்டது என்ற ஆனந்தம். அவள் குகை போன்ற வாயைத் திறந்து பேசுகிறாள்.

"இது என்னுடைய ராஜ்யம்."

பிரஜைகளே இல்லையே, புல் பூண்டு கூடக் கிடை யாதே, இதற்கும் பெருமையோடு பதில் சொல்கிறாள்.

"யாரும் வர அஞ்சும் இந்த வனத்தை, ஒரு கருகூட இல்லாமல் அழித்துவிட்டவள் யார் தெரியுமா? நான் தான்."

அவளுடைய பலத்திலே அவளுக்கு இருந்த நம்பிக்கை அவர்களைப் பார்த்து எவ்வளவு ஏளனமாகப் பேசச் சொல்லுகிறது என்று பாருங்கள்.

"எல்லாம் நாசமாகி விட்டனவே, இனி எனக்குச் சுவையுள்ள மாமிசம் கிடைக்காது என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? என்மேல் எவ்வளவு இரக்கங் கொண்டு உணவாக வந்திருக்கிறீர்கள். உங்கள் தியாகமே தியாகம்! ஒரு வேளை விதிதான் உங்களை நெட்டித் தள்ளியதோ? எப்படி வந்தீர்கள்?"

நாசமாகப் போன பொட்டலின் ராணி என்று சொல்லிக் கொள்வதில் அவள் எவ்வளவு ஆனந்தப்படுகிருள்!

["மருத நிலத்தைப் பாலேயாக்கிவிட்ட தாடகையின், இந்த நாசவேலே வஞ்சம் தீர்த்துக்கொள்வதற்காகச் செய்ததாகும்" என்று கதை வழங்குகிறது. அது வருமாறு:—

தாடகை ஆதியில் அரக்கியல்ல. அவள் சுகேது என்பவனின் பெண். தவமிருந்து பெற்ற பெண். பேரழகுடையவள். இவளுடைய குமாரர்கள் மாரீசன், சுபாகு ஆகியவர். பின் அகத்திய முனிவனின் கோபத்தால் தாடகையின் கணவனுன சுந்தன் சாம்பலானுன். கணவன் இறந்தது கேட்டு அகத்தியனே அழிக்க தாடகையும் குமாரர்களும் செல்கின்றனர். முனிவன் இவர்களே அரக்கராகும்படி சபிக்கிருன்.

மிகுந்திறன் மைந்தரை வேறு நீங்குருத்
தகுந்தொழில் முனிவரன் சலத்தை உன்னியே
வகுந்துவின் வசுஅரி வதிந்த(து) இவ்வனம்
புகுந்தனள் அழலெனப் புழுங்கு நெஞ்சினுள்.

(நீங்குரு - பிரிந்து; தகும்தொழில் - தவச்செயலுடைய: சலம் - கோபம்; உன்னி - நினேந்து; வகுந்துவின் வசு அரி - வழிமுழுதும் சுவாலேயுடைய அக்கினி; அழல் எனப் புழுங்கும் - நெருப்புப்போலக் கொதிக்கின்ற.)

திடீரென்று, பயங்கரமான கோபச் சிரிப்புச் சிரித்தாள். மேகங்கள் இடிந்து பொடியாகும்படி விழித்தாள். மலேகள் சிதறும்படி மிதித்தாள். வேலாயுதத்தைப் பலமாகப் பிடித்து வீச எடுத்தாள்.

எதிரே நிற்கும் அரக்கி தங்களேக் கொல்ல வருகிருள் என்பதை இராமன் உணர்ந்தான். அவளேக் கொல்வதை முனிவரும் ஒப்புவார் என்பதை அறிந்தான். என்ருலும் கணே தொடுக்கவில்லே. ஏன்,

அண்ணல்முனி வற்(கு) அதுக ருத்தெனினும் "ஆவி
உண்ணென" வடிக்கணே தொடுக்கிலன், உயிர்க்கே
துண்ணெனும் வினேத்தொழில் தொடங்கி யுளளேனும்
பெண்ணென மனத்திடை பெருந்தகை நினேந்தான்.

[வடிக்கணை - கூர்மையான பாணம்; துண்ணெனும் - அச்சந் தருகின்ற.]

இராமனின் கருத்தை உணர்ந்தார் முனிவர் :—

“இராமா? இவளைப் பெண் என்று நினைக்கிறாய்? இவளைப் பெண் என்றால் அது பெண்குலத்திற்கே அவமானம். இவளையா தாய்க் குலத்தில் வைத்தெண்ணுகிறாய்? உலகிலே கொடுமையானவை என்று எவை எவையுண்டோ அவற்றை யெல்லாம் செய்துவிட்டவள் இவள். இவ்வளவு பொல்லாதவள் எங்களைமட்டும் யெப்படி கொன்று தின்னாது விட்டுவைத்தாள் என்று எண்ணுகிறாயோ? சதைப் பிடிப்பற்ற சக்கை என்பதுதான் குறை!

‘தீதென்(று) உள்ளவை யாவையும் செய்(து), எமைக்
கோதென்(று) உண்டிலள் இத்தனை யேகுறை!
யாதென்(று) எண்ணுவது இக்கொடி யாளையும்
மாதென்(று) எண்ணுவ தோமணிப் பூணினாய்!’

[கோது - சக்கை: மணிப்பூணினாய் - இரத்தினாபரணங்களை அணிந்த இராமனே!]

“பெண் கொலை செய்வது பாவம்தான். நாணம் உள்ளவள்தான் பெண். இது மட்டுமன்றி, இவள் பெயரைச் சொன்னதும் போர் வீரர்கூடப் பின் வாங்குவர். அப்படியானால் ஆண்மை யாரிடம் இருக்கிறது? இந்த ஆண்மை நிறைந்தவளைக் கொல்வது, பெண் கொலையல்ல.”

இப்படிச் சொல்லி, பொல்லாத் தன்மையை உத்தேசித்துப் பெண்ணைக்கொன்ற பல கதைகளைக் கூறுகிறார். பாவம் வராது என்பதை நிச்சயமாகக் கூறி, “உனக்குப் புகழும் கிடைக்கும்” என்று வலியுறுத்துகிறார்.

அவள் மிகக் கொடியவள் என்று மேலும் கூறுகிறார். யமன் உயிர்களைப் பிடித்துச் செல்பவன்தான். ஆனால் விதி முடிந்து விட்டதா என்று தருமம் பார்த்துத் தான் செய்கிறான். இவளோ, யமனுக்கும் கொடிய

யமன். நரவாடை பட்டதும் கொன்று தின்றுவிடத் துடி துடிக்கும் கூற்று.

சாற்றும்நாள் அற்ற(து) என்று தருமம்பார்த்(து),
ஏற்றும் விண்ணென்ப(து) அன்றி, இவளைப்போல்
நாற்றம் கேட்டலும் தின்ன நயப்பதோர்
கூற்றுண் டோசொலாய்? கூற்(று) உறழ்வேலினாய்!

[சாற்றும் நாள் - ஊழ்வினையின்படி விதித்துக் கூறப்பட்டுள்ள ஆயுள் நாள்; ஏற்றும் - கொண்டு செல்லும்; விண் - மேலுலகம்; நயப்பது - விரும்புவது; கூற்று - யமன்; கூற்று உறழ் வேலினாய் - (பகைவர்க்கு) யமனைப் போன்ற வேலையுடைய இராமனே!]

முடிவாக,

"பின்னும் தாழ்குழல் பேதைமைப் பெண்ணிவள்
என்னும் தன்மை எளிமையின் பாலதே."

[பின்னி, நீண்டு தொங்குகிற கூந்தலையும், மடமைக் குணத்தையும் உடைய பெண் என்று எண்ணுவது தகுதியன்று.]

என்று கூறி, "இராமா, நான் ஏதோ இவள் பேரில் கோபப்பட்டு இவளைக் கொல்லச் சொல்வதாக நினையாதே, தருமம் பார்த்துத்தான் இவளைக் கொல்லச் சொல்லுகிறேன்" என்று சொன்னார்.

"நல்லதோ, கேட்டதோ, தாங்கள் 'செய்க!' என்று கட்டளை இட்டால் அதை வேதவாக்காகக் கொண்டு உடன்செய்யத் தயாராயிருக்கிறேன். அப்படிச் செய்வதே தருமம், முறை" என்று கூறினான் பணிவுடன் இராமன்.

குறிப்பறிதல் என்பது தாடகையிடம் அதிகமாக இருந்தது என்பது தெரிகிறது பாருங்கள்!

கங்கைத் தீம்புனல் நாடன் கருத்தையும்,
மங்கைத் தீஅனை யாளும் மனக்கொளாச்
செங்கைச் சூலவெந் தீயினைத், தீயதன்
வெங்கண் தீயொடு மேற்செல வீசினாள்.

[கங்கைத் தீம்புனல் நாடன் - கங்காநதியின் மதுரமான நீரைக்கொண்ட கோசல நாட்டானாகிய இராமன். மனக்கொளா -

மனத்திலே கொண்டு; வெந்தீ - கொடிய நெருப்பு; தீய - கொடிய; வெங்கண் - பயங்கரமான கண்கள்.]

காளை நினைத்ததைக் கண்டாள் கன்னி. அவள் பெண் வடிவங்கொண்ட தீ. கையிலுள்ள சூலம் கொடிய தீ. அவளுடைய கொடுமை நிறைந்த கண்களும் பயங்கரமான தீ. ஒரே நெருப்பு மயம்! கொடிய சூலாயுதத்தை வீசி எறிந்துவிட்டாள்; மூன்று இலைகளைக் கொண்ட சங்கார காலாக்கினியைப் போன்ற சூலம், முழு மதியை விழுங்கவரும் இராகுவைப்போல பாய்ந்து வந்தது.

என்ன ஆச்சர்யம்! பறந்து வந்த சூலம் பாதி வழியிலேயே இரண்டு துண்டாகியது. இராமன் அம்பை விட்டானா! எப்பொழுது எடுத்தான், எப்படிவிட்டான்? இவை அருகே இருந்த முனிவருக்கும் இலக்குமணனுக்குமே தெரியவில்லை!

**மாலும் அக்கணம் வாளியைத் தொட்டதும்**
**கோல விற்கால் குனித்ததுங் கண்டிலர்;**
***காலனைப்பறித் துக்கடி யாள்விட்ட**
**சூலம் அற்றன துண்டங்கள் கண்டனர்.**

[மால் - விஷ்ணுவின் அவதாரமான இராமன்; அக்கணம் - அதே சமயத்தில; வாளி - பாணம்; கோலம் - அழகிய; குனித்ததும் - வளைத்ததும்; கடியாள் - கொடுமையானவள்.]

'கண்டிலர்' என்று தான் கம்பன் கூறுகிறான். தாடகையும் கண்டாளில்லையாம்! என்ன விரைவு!

இதோ பாருங்கள். கல் மழையும் வில் மழையும் பொழியும் காட்சியை.

**அல்லின் மாரி அனைய நிறத்தவள்**
**சொல்லு மாத்திரை யிற்கடல் தூர்ப்பதோர்**
**கல்லின் மாரியைக் கைவகுத் தாள்அது**
**வில்லின் மாரியின் வீரன் விலக்கினான்.**

---

* குறிப்பு: 'காலனைப் பறித்து அக்கடியாள் விட்ட சூலம்' என்பது யமனை இடத்தை விட்டு எடுத்து தன் மாயையால் ஆயுதமாக்கி எதிரியின்மேல் எறிந்தது போன்ற சூலம் என்பது.

[அல் - இருள்; மாரி - மேகம்; மாத்திரை - அளவில்; கடல் தூர்ப்பதோர் - கடலை நிரப்பி விடும்படியான; கை வகுத்தாள் - கைகளில் எடுத்துப் பொழிந்தாள்.]

கல் மாரியும் வில் மாரியுமாக விருந்தால் முடிவு வேண்டுமல்லவா? முடித்துவிடத் தீர்மானித்து விட்டான் இராமன்.

சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம் கரிய செம்மல்
அல்லொக்கும் நிறத்தி னுள்மேல் விடுதலும் வயிரக் குன்றக்
கல்லொக்கும் நெஞ்சில் தங்கா(து) அப்புறம் கழன்று கல்லாப்
புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற் றன்றே!

[கடிய - அதிக; சரம் - அம்பு; செம்மல் - இராமன்: அல் ஒக்கும் - இருளைப்போன்ற; புல்லர் - அறிவில்லாதவர்.]

இராமன் அம்பை எய்தான். சொல்லைப் போன்று கடியவேகத்துடன் சென்றது அது. சொல் என்பது எவ்வளவு வேகமுடைய தென்பதை எவ்வளவு அழகாகச் சொல்லுகிறான். அம்பு தாடகையின் நெஞ்சில் புகுந்து அப்புறம் கழன்று போய்விட்டதாம். அறிஞர்களின் உரை மூடர்களின் ஒரு காதில் புகுந்து மறு காது வழியாக வெளியே சென்று விடுவதைப்போல இலகுவாகப் புகுந்து போனது உண்மைதான். இப்படியே விட்டு விட்டால் அம்பின் சக்தி தெறியாமற் போகுமல்லவா? அதையும் சொல்கிறான் கவிஞன். வச்சிர மயமான கல்லைப்போன்ற உறுதியான நெஞ்சை ஊடுருவிச் சென்றது என்றாலே போதுமல்லவா?

தாடகை விழுந்ததும், ஈரப்பசையற்றிருந்த பாலை நிலத்தில் இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தது. இராவணன் முதலிய அரக்கர்களுக்கு இனி ஏற்படவிருக்கும் தீங்கைத் தெரிவிக்கும் அபசகுனமாக அவன் கொடி அற்றுவீழ்ந்தது போலிருந்ததாம் அவள் வீழ்ச்சி.

காசுலாம் கனகப் பைம்பூட்
காகுத்தன் * கன்னிப்போர்

---

* கன்னிப்போர் - முதற் போர். குமரிப்போர் என்றும் சொல்லப்படும். பெண்ணுடன் நடத்திய போர் என்றும் சொல்லுவதுண்டு.

[இரத்தினங்கள் ஜொலிக்கிற பசும் பொன்னுபரணங்களை அணிந்த இராமனின் முதற் போர்.]

**என்று தாடகை வதத்தைக் கவிஞன் கூறுகிறுன்.**

**சொல்:** முனிவர்களின் சாபச்சொல், தவருது பயனளிப்ப தால் அம்புக்கு உவமையாயிற்று. கடுஞ்சொல் எவ்வளவு கொடுமையானது என்பது "ஆருதே நாவினுற் சுட்டவடு" என்ற தனுல் நன்கு தெரியும்.

---

## 9. வேள்வி காத்தது

விஸ்வாமித்திர முனிவர், தேவர்களின் வேண்டுகோட் படி இராமனுக்குப் படைக் கலங்கள் யாவையும் கொடுத்தார். 'கொடுத்தார்' என்று புலவன் வாளா கூறி விடுவானு? மருந்தைக் கண்டால் வியாதி நில்லாது. வள்ளல் *சடையப்பரைக் கண்டால் வறுமை நில்லாது. அந்தச் சடையப்பரது சொல் போன்ற படைக் கலங் களைக் கொடுத்தார் என்று கம்பன் கூறுகின்ருன். சடை யப்பரது சொல் தப்பாது பயன் தருவதுபோல, படைக் கலங்களும் வெற்றி யொன்றையே கொடுக்கத் தக்கன என்பது குறிப்பாக உணர்த்தப்பட்டது.

அறிவில்லாதவனிடம் இலக்கிய நூல்களை அள்ளிக் கொடுத்தால் ஏதாவது பயன் உண்டாகுமா? காப்பாற்றத் தெரியாதவனிடம் கோடி ரூபாயைக் கொடுத்தால் பிர யோசனமென்ன? அவைகளுக்கு வாய் இருக்குமானுல், இந்த மூடன் நம்மைக் கையாளவேண்டிய துர்ப்பாக்கியம் ஏற்பட்டதே என்று வருந்தும். கையாளுபவனின் திறமையைப் பொறுத்தே சாமான்களின் மதிப்பும் இருக்கும்.

---

* சடையப்பர் நல்ல ரசிகர், வள்ளல், கம்பனின் அரிய நண்பர், கம்பனுக்கு ஆதரவு காட்டியவர். கவிஞன் தன் நன்றியறிதலைத் தெரிவிக்கு முகத்தான் இராமாயணத்தில் பல இடங்களில் சடையப்பரைக் குறிப்பிட் டிருக்கிருன்.

தெளிந்த மனத்தையுடைய ஒருவனது முற்பிறப்பில் செய்த சற்கருமங்களின் பலன்கள் மறுபிறப்பில், தப்பாமல் அவனைத் தேடி வந்தடைவதுபோல முனிவரால் கொடுக்கப்பட்ட படைக் கலங்கள், ராமனை வந்தடைந்தனவாம். சரியான பாத்திரத்திடம் போகிறோமென்று அவை மகிழ்ச்சியு மடைந்தனவாம்!

முனிவரும் இராம இலக்குவர்களும் சென்று கொண்டிருக்கின்றனர். முனிவர் ஒரு சோலையைக் காட்டி, மகாபலிச் சக்கரவர்த்தியின் சரித்திரத்தையும் வாமனவதாரக் கதையையும் கூறுகிறார்.

"தங்கள் கணவரினும் சிறந்த தெய்வமும் தவமும் வேறில்லையென்று எண்ணும் கற்புடைய பெண்டிரின் மனம்போல, பரிசுத்தமானது இந்தச் சோலை. இது திருமால் தவம் செய்த இடம். என்னுடைய யாகத்தை முடிக்க இஃதுவே தகுதியான இடம்" என்றார் முனிவர்.

ராஜ குமாரர்களைக் காவல் காக்கும்படி கட்டளையிட்டுவிட்டு யாகத்தை ஆரம்பித்து விட்டார்.

அவர்கள் வேள்வியைக் காத்த முறை இது:

எண்ணுதற்(கு) ஆக்கரி(து), இரண்டு மூன்றுநாள்
விண்ணவற்(கு) ஆக்கிய முனிவன் வேள்வியை,
மண்ணினைக் காக்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் காக்கின்ற இமையிற் காத்தனர்.

[எண்ணுதற்கு - நினைப்பதற்கு; ஆக்க - செய்ய; அரிது - அருமையானது, இங்கே இயலாதது என்று பொருள்; இரண்டு மூன்று நாள் - ஆறுநாள்.]

எண்ணுவதற்கும், செய்வதற்கும் அருமையான முறையில் காவல் காத்தார்களாம், கண்ணை இமை காப்பதுபோல, நாலாபுறமும் சுற்றித் திரிந்து.

காவல் செய்து திரிகின்றனர் காளை வீரர்கள். "யாரோ கொடுமையாளர்கள் வருவார்கள் என்று முனிவர் சொன்னாரே, ஒருவரையும் காணோமே" என்று இராமன் யோசித்தான். அந்த இளமை யுள்ளம்

கொடுமையாளர்களைத் தொலைக்கத் துடி துடித்தது போலும் ;

சந்தேகம் என் ? 'எப்பொழுது வருவார்கள் ?' என்று முனிவரையே கேட்டுவிட்டான் இராமன்.

**காத்தனர் திரிகின்ற காலை வீரரில்**
**மூத்தவன் முழுதுணர் முனியை முன்னி, 'நீ**
**தீத்தொழில் இயற்றுவர் என்ற தீயவர்,**
**ஏத்தரும் குணத்தினுய் ! வருவதென்று ?' என்றுன்.**

[முன்னி - அடைந்து ; ஏத்த அருங் குணத்தினுய் - புகழ்ந்து சொல்லுதற்கு இயலாத நற் குணங்களையுடையவனே !]

இராமன் கேட்டதற்கு "வார்த்தை மாறுரைத்திலன் முனிவன்." பதில் வராமலிருக்கவே அவர் மௌன விரதம் பூண்டிருப்பதை உணர்ந்தான். முனிவரைத் தொழுது விட்டு வெளியே வந்து

**பார்த்தனன் விசும்பினைப் பருவ மேகம்போல்**
**ஆர்த்தனர் இடித்தனர் அசனி அஞ்சவே.**

[ஆர்த்தனர் - ஆரவாரம் செய்தனர் ; அசனி - இடி.]

இராமன் ஆகாயத்தைப் பார்த்தான். கார் காலத்து மேகத் தொகுதிபோல அரக்கர் கூட்டம் வருவதைக் கண்டான். எல்லோரையும் அஞ்சச் செய்கிற இடியும் அஞ்சுகிறமாதிரி அவர்கள் ஆரவாரம் செய்தார்கள் ; முழக்கினுர்கள்.

அது மட்டுமா ? அவர்கள் என்னென்ன செய்தார்கள் என்று பாருங்கள் !

**எய்தனர், எறிந்தனர், எரியும் நீருமாய்ப்**
**பெய்தனர், பெருவரை பிடுங்கி வீசினர்,**
**வைதனர், தெழித்தனர் மழுக்கொண்டு ஓச்சினர் ;**
**செய்தனர் ஒன்றல தீய மாயமே.**

[எய்தனர் - (அம்புகளைப்) பிரயோகித்தார்கள் ; பெரு வரை - பெரியமலை ; தெழித்தனர் - அதட்டினுர்கள் ; மழு - எரி இரும்பு ; ஓச்சினர் - வீசினர். ஒன்றல - ஒன்று அல்ல, அதாவது பல என்று பொருள்.]

அம்புகளை எய்தனர். வேலை வீசினர். நெருப்பும் நீருமாய்ச் சொரிந்தனர். பெரு மலைகளைப் பெயர்த் தெடுத்து எறிந்தனர். இப்படிப் பல கொடிய மாயங்களைச் செய்தனர்.

அரக்க சேனை வானத்தையே மறைத்துவிட்டது, அலைகளுடைய கடல் எழுந்து ஆகாயத்தில் ஊசலாடுவது போல.

இந்தக் கூட்டத்தைக் கண்டதும், இவர்கள் தாம் முனிவர் சொன்ன அரச்கர்கள் என்று இராமன் உணர்ந்தான். இலக்குமணனுக்குச் சொல்லுகிறான்! "கோரப் பற்கள், செம்பட்டை மயிர், சுழலுகின்ற கண்களில் நெருப்புப் பொறி இவைகளுடன் பெருங் கோபத்தால் உதட்டைக் கடித்துக்கொண்டிருக்கிறார்களே. இவர்கள் தாம் முனிவர் உரைத்த அரக்கர்."

"கவருடை எயிற்றினர், கடித்த வாயினர்
துவர்நிறப் பங்கியர், சுழல்கண் தீயினர்,
பவர்சடை அந்தணன் பணித்த தீயவர்
இவர்'' என இலக்குவற்கு இராமன் காட்டினான்.

[கவருடை எயிற்றினர் - இரட்டையாகத் தோன்றுகிற கோரத் தந்தங்களை யுடையவர்கள்; துவர் - செம்பட்டை; பங்கி - ரோமம்; பவர் - நெருங்கிய.]

"அப்படியா?" என்றான் இளையவன். ஆகாயத்தைப் பார்த்தான். வில்லைப் பார்த்தான். "இதோ, அவர்களுடைய துண்டங்களைக் காண்பீர்கள்'' என்றான். அடிபடுகிற அரக்கர்களின் மாமிசமும், ரத்தமும் ஓம குண்டத்தில் விழாதபடி *சரகூடம் கட்டிவிட்டான் இராமன்.

இதை

தாமரைக் கண்ணனும் சரங்க ளேகொடு
கோமுனி இருக்கைஓர் கூட மாக்கினான்.

என்று கம்பன் கூறுகிறான்.

---

* சரகூடம் - அம்புகளை எய்து பின்னிப் பின்னி பந்தல் போலாக்குதல்.

திருப்பாற்கடலில் ஆலகால விஷம் தோன்றியபோது, ப்ரம சிவனைச் சரணடைந்த தேவர்களைப்போல, அரக்கக் கூட்டத்தைக் கண்ட முனிவர்கள் இராமனைச் சரணடைந் தனர். உடனே இராமன் :

"கலங்கல் நீர் என"ச் சொல்லிக் "கவித்தனன் கரதலம்" - அமைதியோடிருக்கும்படி கையமர்த்தினான். உடன் "சிலையின் தெய்வ நா"ணை செவித்தலம் நிறுத் தினன். அம்பை செவி வரை இழுத்துவிட்டான். புவி இரத்தக் காடாகியது. அரக்கர்கள் தலை ஒன்று மேல் ஒன்ருக விழுந்து மலைபோலாயின.

> கவித்தனன் கரதலங் 'கலங்கல் நீர்!'எனச்
> செவித்தலம் நிறுத்தினன், சிலையின் தெய்வநாண்
> புவித்தலங் குருதியின் புணரி யாக்கினன்
> குவித்தனன் அரக்கர்தம் சிரத்தின் குன்றமே.

[கவித்தனன் - கையமர்த்தல், அபயமளித்தல்; தலம் - இடம்; புணரி - கடல்.]

ஒரு கவியில் என்னென்ன செயல்களைக் கூறி யிருக் கிருன். எவ்வளவு விரைவுத் தன்மை! ஓசை! எவ்வளவு நயமாக இருக்கிறது! பெருமிதம், செயல், வீரம், பயன், காட்சி, இவைகள் எப்படிப் பீறிட்டுக் கொண்டு வரு கின்றன இந்த ஒரு கவியில்!

திருமகன் நாயகன் தெய்வ வாளி

தாடகைக் குமாரர்களான மாரீசனைக் கொண்டுபோய் கடலில் தள்ளியது. சுபாகுவை யமபுரத்திற்கே அனுப்பி விட்டது!

விரைவில் நிகழப்போகும் திருமணத்தை நினைத்துக் கொண்டான் கவிஞன். சீதா கல்யாணமும் ஜெயலட்சுமி யின் சேர்க்கையும் தோன்ற "திருமகள் நாயகன்" என்று கூறி யிருக்கிருன், கவி.

இராமன் கட்டிய சரகூடத்திற்கு மேலாக அரக்கர் களின் உடலைத் தின்ன வந்த பருந்துகள் பந்தலிட்டாற் போலப் பறந்தன. இந்தப் பந்தலைக் கிழித்துக்கொண்டு

பொழிந்தது தேவர்கள் சொரிந்த பூமழை. வாத்தியங்கள் முழங்கின. தேவர்கள் திரண்டு வந்து "சுந்தர வில்லி"யைத் தொழுதனர்.

பந்தரைக் கிழித்தது பரந்த பூமழை
அந்தர துந்துமி அலையின் ஆர்த்தன ;
இந்திரன் முதலிய அமரர் ஈண்டினர்,
சுந்தர வில்லியைத் தொழுது வாழ்த்தினர்.

[அந்தர துந்துமி - பேரிகைகள் ; அலையின் - கடல் முழங்குவதுபோல: ஈண்டினர் - வானத்தில் திரண்டுவந்து ; சுந்தர வில்லியை - கோதண்ட ராமனை.]

போர்த் தொழில் புரிந்த வில் இப்பொழுது ஓய்வு பெறுவதுபோல் இராமன் தோளில் அமர்ந்திருக்கிறது. வேள்வி வெற்றிகரமாக முடிந்தது. முனிவர் சொல்கிறார் : "இராமா ! வேள்வி காத்தது உனக்கு ஒரு பெரிய காரியமா? பிரளய காலத்தில் எல்லா உலகத்தையும் வயிற்றினுள் வைத்துக் காப்பவனல்லவா நீ ! யான் செய்த பெரும்பாக்கியம் என்றே இதை எண்ணுகிறேன்."

'பாக்கியம்எனக் குளதென நினைவுறும் பான்மை
போக்கி நிற்கிது பொருளென உணர்கிலென் ; புவனம்
ஆக்கி மற்றவை அகிலமும் மணிவயிற் றடக்கிக்
காக்கும் நீஒரு வேள்விகாத் தனையெனுங் கருத்தே.'

[போக்கி - அல்லாது ; பொருளென - பெரிய காரியமென்று ; **கருத்து** - உலகங்களையெல்லாம் படைத்து, அளித்து, அழிக்கும் ஆற்றலுள்ள உனக்கு யாகத்தைக் காத்தல் பெரிய காரியமென்று நினைக்கமாட்டேன். என் பூர்வ ஜென்மப் புண்ணியத்தால் நீ இவ்வாறு அருள் செய்தாயென்று எண்ணுவேன்.]

மறு நாள் காலை. இராமன் முனிவரை யடுத்து, "இன்று யான் செய்யவேண்டிய பணி யாது ?" என்றான்.

இங்கே, 'ஐய !" என்று அழைக்கின்றார் இராமனை.

" அரிய காரியங்களைச் செய்யச் சொன்னாலும் அவை உனக்கு அரிய காரியமா ? பெரிய காரியங்கள் சில இருக்கின்றன. அவை பின்னர். இப்பொழுது வளம் நிறைந்த மிதிலையரசன் புரியும் வேள்வியைக் காணப் போவோம்."

"அரியயான் சொலின் ஐய! நிற்கு அரியதொன்று இல்லை;
பெரிய காரியம் உள, அவை முடிப்பது பின்னர்,
விரியும் வார்புனல் மருதம்சூழ் மிதிலையர் கோமான்
புரியும் வேள்வியும் காண்டு நாம் எழுக" என்று, போனார்.

[நிற்கு - உனக்கு; விரியும் - பரவிப் பாய்கின்ற; வார் - நீண்ட; புனல் - நீர்வளமுள்ள; மருதம் - வயலும் வயல்சார்ந்த இடமும்; காண்டும் - பார்ப்போம்.]

பெரிய காரியம் என்று முனிவர் கூறுவது இராவண வதம், அரசாட்சி முதலியவற்றை.

மூவரும் நடந்தனர் மிதிலை நோக்கி.

---

## 10. கால் வண்ணம் கண்டது

முனிவரும் காளையர் இருவரும் புறப்பட்டுப் பல ஆறுகளையும் சோலைகளையும் கடந்து மிதிலை நகரையுடைய விதேக நாட்டை யடைந்தார்கள்.

விதேக நாடு எப்படிப்பட்டது என்று கம்பன் விரிவாகக் கூறுகிறான். ஒரு பகுதியை நாம் பார்ப்போம்:

அழகான சோலைகள், ஆனந்தமான சோலைகள்; ஒவ்வொரு சோலையும் ஒவ்வொரு நர்த்தனசாலை. பல நீர் வீழ்ச்சிகள், இயற்கை மதகுகள். நீர் விழுந்து புரண்டு பாய்ந்து, மத்தளத்தில் கைதேர்ந்தவன் காட்டும் சப்த சித்திரங்களை உண்டாக்குகிறது. அசோக மரங்களிலே அன்று பூத்த மலர்கள் விளக்குகளைப்போல் சோதியுடன் மிளிர்கின்றன. பற்பல மலர்களிலிருந்து தேன் தாரைகள் ஒழுகுகின்றன. வீணையின் நரம்பைப்போல இருக்கிறது அந்தக் காட்சி. வீணையின் பீடம்போன்ற மலர்களைச் சுற்றிச் சுற்றி வண்டுகள் ரீங்காரமிட்டுப் பாடுகின்றன. வீணுகானத்துக்கும் தாள ஓசைக்கும் ஏற்ப பல வண்ணக் கலாப மயில்கள் நாட்டியமாடுகின்றன, நாட்டிய மாதர்களைப் போல.

* வரம்பில் வான்சிறை மதகுகண் முழவொலி வழங்க
அரும்பும் நாண்மலர் அசோகங்கள் அலர்விளக்(கு) எடுப்ப,
நரம்பின் நான்றதேன் தாரைகொள் நறுமலர் யாழிற்
சுரும்பு பாண்செயத் தோகைநின்(று) ஆடுவசோலை

[வரம்புஇல் - அளவில்லாத; வான்சிறை - பெரிய அணை; முழவு ஒலி - மத்தள ஓசை; அரும்பும் - அரும்புகின்ற; நான்ற - தொங்கிய; சுரும்பு - வண்டுகள்; பாண் - இசைப் பாட்டு.]

வயல்களில் தாமரை மலர்கள் பூத்துக் கிடக்கின்றன. வயல் நீரில் முளைத்த களைகளைப் பிடுங்குகின்றனர் உழவர் மகளிர். ஆடவருள்ளத்தை மயக்கிக் கொள்ளை கொள்ளுகிற அவர்களுடைய நீண்ட கண்களின் நிழலைத் தூக்க மயக்கத்திலுள்ளநாரை, மீனென்று கொத்தி நீராயிருக்கக் கண்டு வெட்க முறுகின்றனவாம்! செழிப்பான மருத நிலம் அது.

அன்னங்கள் தங்கள் இனமோ என்று மயங்கி எண்ணும்படியான நடையலங்காரிகளாம் அந்நாட்டு மங்கைகள். குயில்போலும் குரலுடைய அப்பெண்கள் குளத்தில் நீராடிச் செல்கின்றனர். அவர்கள் உடலில் அணிந்து வந்த குங்குமக் கலவை நீரிற் பாய்ந்து அன்னப் பறவைகளின் இறக்கைகளில் படிந்துவிடுகிறது. இதனல் துணைப் பறவைகள் ஒன்றை யொன்று அறிந்துகொள்ள முடியாமல் ஊடல் செய்கின்றன. தாமரை மலர்கள் இதழ் குவிந்து உறங்கினலும் பறவைகள் உறங்காமல் ஒலித்துக் கொண்டே யிருக்கின்றனவாம் அக்குளத்தில்!

தூவி யன்னந்தம் இனமென்று நடைகண்டு தொடரக்,
கூவு மென்குயிற் குதலையர் குடைந்ததண் புனல்வாய்
ஓவில் குங்குமச் சுவடுற ஒன்றொடொன்(று) ஊடிப்
பூஉ றங்கினும் புள்ளுறங் காதன பொய்கை.

[தூவி - சிறகு; மெல்குயில் குதலையர் - மென்மையான குயிலோசைபோலும் மழலை மொழிகளையுடைய மாதர்கள்; குடைந்த - மூழ்கி விளையாடின; ஓவுஇல் - (நீரில் கலந்த நிறம்) நீங்குதலில்லாத; புள் - பறவை; பொய்கை - இயற்கையான நீர் நிலை.]

---

* 'அமரன் சிருஷ்டித்த அற்புதநாடு' என்ற தலைப்பில் தண்டலை மயில்கள் ஆட என்று வந்த பாட்டைப் போன்றதுதான் இதுவும். இரண்டையும் சொல்லியிருக்கிற முறையை ஒப்பு நோக்கி மகிழவேண்டும்,

பெண்களின் கண்களை வாளுக்கு ஒப்பிடுகிறார்கள் கவிகள். வாளாகிய கண்ணுக்கு இமைகள் உறை. உறையிலே வாளைச் செலுத்தி (தண்ணீரில் மூழ்கும்பொழுது கண்ணை மூடிக்கொள்ளத்தானே வேண்டும்!) நீரில் மூழ்கித் துழாவி விளையாடுகிறார்கள். அவர்கள் மூழ்கி எழுந்திருப்பது, பாற்கடலைக் கடைந்தபோது அதனின்றும் திருமகள் தோன்றிய காட்சி போலிருக்கிறதாம். குளங்களில் உள்ள பூக்களைக் குடைகிற பறவைகளின் ஒலியுடன் போட்டியிட்டு ஒலிக்கிறதாம் மாதர்கள் அணிந்துள்ள கைவளையல்கள்!

இப்படி வளம் நிறைந்த விதேக நாட்டிலே சிறிது தூரம் சென்று மிதிலை நகரத்துக் கோட்டையை அணுகினார்கள். அங்கே வெற்றிடத்திலே ஒரு மேட்டைக் கண்டார்கள். இராமன் பாதம் பட்டதும் அக்கல்லுரு பெண்ணுருவாகி நின்றது.

முனிவர் சொல்கிறார்.

'மாயிரு விசும்பிற் கங்கை மண்மிசை இழித்தோன் மைந்த!
மேயின உவகையோடு மின்னென ஒதுங்கி நின்றாள்
தீவினை நயந்து செய்த தேவர்கோன் தனக்குச் செங்கண்
ஆயிரம் அளித்தோன் பன்னி அகலிகை ஆகும்' என்றான்.

[மா இரு விசும்பின் - மிகவும் பெரிய ஆகாசத்திலிருந்து; இழித்தோன் - இறக்கிக்கொண்டு வந்த (பகீரத சக்கரவர்த்தியின் வமிசத்திற் பிறந்த மைந்தா என்று அழைக்கிறார்) மேயின உவகையோடு - பொருந்தின மகிழ்ச்சியுடனே; மின்னென - மின்னற் கொடிபோல, அதாவது நாணப்பட்டு; பன்னி - பத்னி.]

"உவகையும், நாணமும் ஒருங்கே கலக்க ஒதுங்கி நிற்கின்றாளே இவள், வேண்டுமென்றே தவறுசெய்த இந்திரனுக்கு ஆயிரங் கண்கள் கொடுத்த கௌதம முனிவரது பத்தினியாகிய அகலிகை" என்றார் முனிவர்.

இதிலேயே எல்லா விஷயங்களும் அடங்கிவிட்டன. என்றாலும் இன்னும் விரிவாகக் கேட்க விரும்புகின்றான் இராமன்.

பொன்னையேர் சடையான் கூறக் கேட்டலும் பூமின் கேள்வன்,
'என்னையே! என்னையே! இவ் வுலகியல் இருந்த வண்ணம்!
முன்னை ஊழ் வினையி னாலோ? நடுவொன்று முடிந்த துண்டோ?
அன்னையே அனையாட்(கு) இவ்வா(று) அடுத்தவாறு அருளு'
என்றான்.

[பொன்னை ஏர் சடையான் - செந்நிறத்தால், பொன்னை யொத்த சடையையுடைய கௌசிகன்; கேள்வன் - கணவன் - என்னையே - எத்தன்மையிது (ஆச்சர்யப்படுகிறான்); வண்ணம்; விதம்; அனையாள் - ஒத்தவள்; இவ்வாறு அடுத்தவாறு - இப்படியாக நேர்ந்த காரணத்தை.]

அகலிகையைப் பார்த்ததும் இராமனின் இதயம் இரக்கத்தால் பொங்குகிறது. "தாயைப் போன்றிருக்கும் இவளுக்குமா இப்படிப்பட்ட துயரம்?" என்று கேட்கிறான். தோற்றத்திலிருந்து இவள் தவறு செய்யக்கூடியவளல்ல என்று எண்ணுகின்றான் போலும்! அதனால்தான் 'இது முந்தையூழ்வினையோ?' என்கிறான்.

சீதாகல்யாணம் சமீபித்து விட்டதென்பதை நினைவு படுத்தவே *'பூமின் கேள்வன்' என்று கவிஞன் அழைக்கிறான்.

அகலிகையின் சாப வரலாற்றைச் சொல்லுகிறார் முனிவர்.

அகலிகையினது கண்களாகிய வேலாயுதங்களும் மன்மதனுடைய பாணங்களும் பாய்ந்து விட்டன இந்திரன் மீது. மோகவேகம் அவன் உடலைத் தகிக்கிறது. அதிலிருந்து பிழைக்கும்படியான உபாயத்தைத் தேடி உழன்றான். ஒரு நாள் அறிவு நீங்கி காம மயக்கத்திலே உழன்ற போது அதமம் புரிவதே உய்யும் வழி என எண்ணினான். 'தவறு' என்று உணர்ந்தான்; பெண்மை இன்பத்திற்காக, உணர்ந்ததையும் மறந்து செயலாற்ற முற்பட்டுவிட்டான்! களங்கமற்ற மனத்தினரான கௌதமருடைய உருவத்தையே தாங்கி ஆசிரமத்தினுள்ளே புகுந்தான் கறைபட்ட உள்ளத்தவன்.

* பூமின் கேள்வன் - பூமியினிடத்து அவதரித்த மின்னல் போன்ற ஜானகியின் கணவன்.

தையலாள் நயன வேலும் மன்மதன் சரமும் பாய,
உய்யலாம் உறுதி நாடி உழல்பவன், ஒருநாள் உற்ற
மையலால் அறிவு நீங்கி, மாமுனிக்(கு) அற்றம் செய்து,
பொய்யிலா உள்ளத் தான்தன் உருவமே கொண்டுபுக்கான்

[உய்யலாம் - பிழைக்கும்படியான ; அற்றம் - பிரிவு.]

"புக்கவ ளோடும் காமப் புதுமண மதுவின் தேறல்
ஒக்கஉண் டிருத்த லோடும், உணர்ந்தனள், உணர்ந்த பின்னும்,
'தக்கதன்(று)' என்ன ஓராள்; தாழ்ந்தனள் இருப்பத் தாழா,
முக்கணன் அனைய ஆற்றல் முனிவனும் முடுகி வந்தான்.

[புக்கு - சென்று; மதுவின் தேறல் - தெளிந்த மது: ஒக்க - சமமாக; ஓராள் - ஆராய்ந்து அறியாதவளாய்: தாழ்ந்தனள் - கீழ்ப்படிந்தாள்; தாழா - குறைவில்லாத; முக்கணன் - சிவபெருமான்; முடுகி - விரைவாய்.]

காமமாகிய மதுவின் தெளிவை அவ்விருவரும் சமமாக அனுபவிக்க ஆரம்பித்தார்கள். புலன் உணர்ச்சியினால் 'அவன்' தன் கணவனல்ல என்று உணர்ந்தாள். உணர்ந்தும் 'இது சரியன்று' என்று ஒதுக்கித் தள்ளாதவளாய்க் கிடந்தாள். உணர்ந்தும் விலக்காதபோது 'தாழ்ந்தனள்'. அவள் வீழ்ச்சிக்கு புதுமண மதுவின் தேறல் —புதிய இன்பத்தை இன்னும் அனுபவிக்க வேண்டுமென்ற விருப்பமா? பயங்கரப் படுகுழியில் தள்ளப்பட்டோமே என்ற உளைச்சலா? 'மது' மயக்கத்திலே உணர்ச்சி யிருந்தும் செயலாற்றும் திறனின்றிக் கிடந்தாளோ!

தனக்கு நேர்ந்தது சரி அல்லது தவறு, தான் செய்ய வேண்டிய தென்ன என்பதை எண்ணி யறிதற்கு இயலாமல் உணர்ச்சி யின்றிக் கிடந்தாள். தனக்கு நேர்ந்தது "தக்கது அன்று என்ன ஓராள்." ஆகையினாலே "நெஞ்சினால் பிழைப்பிலாள்." மரக்கட்டை போன்று கிடந்த அவளிடம் என்ன இன்பத்தைக் கண்டான் இந்திரன்?

கௌதமர் வந்தார்.

நிரந்தரம் உலகி னிற்கு
நெடும்பழி பூண்டாள் நின்றாள்.

[எக்காலத்தும் உலக முழுவதும், நிலைத்திருக்கும்படியான நெடும் பழியை மேற்கொண்டவளாகிய அகலிகை நின்றாள்.]

வேறென்ன செய்ய முடியும் அவளால்? அபலை. நின்ருள், உடலைத் தாங்குவதோடு, வரப்போகும் பெரும் பழியையும் தாங்கத் தயாராக.

கௌதம முனிவர் இருவரையும் பார்த்தார். விழிகளில் தீ சிந்துகிறது. இந்திரனை நோக்கிக் கொடுமையான சாப மிட்டார்.

கௌதமர் சாபம் கொடுத்த வரலாற்றைக் கௌசிகன் சொல்லும் பொழுது,

தூயவன், அவனை, நின்கைச் சுடுசரம் அனைய சொல்லால்

சபித்தான்" என்ருர்.

தாடகவதைப் படலத்தில்,

சொல்லொக்கும் கடிய வேகச் சுடுசரம் என்று இராம னின் அம்பைக் கவிஞன் வர்ணித்தான். அங்கே சொல்லைப் போன்ற அம்பு, இங்கே அம்பைப் போன்ற சொல்.

வேள்விப் படலத்தில்,

மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணல்தன் சொல்லே யன்ன படைக்கலம் அருளி ஞனே.

வள்ளல் சடையப்பரின் சொல் போன்ற படைக் கலங்கள் என்ருன் இங்கே. வள்ளல்கள், முனிவர்களின் சொற்கள் இராமபாணத்தைப் போன்றது. இராமபாணம் வள்ளல்கள், முனிவர்களின் சொல்லைப் போன்றது.

கௌதமன்:

மெல்லிய லாளை நோக்கி விலைமகள் அனைய நீயும்
கல்லிய லாதி யென்ருன், கருங்கலாய் மருங்குவீழ்ந்தாள்.

[கல் இயல் ஆதி - கல் வடிவம் ஆவாய்; மருங்கு - அவ்விடத்தி லேயே.]

"இந்தச் சாபத்திற்கு முடிவு கிடையாதா? மன் னிப்பே இல்லையா?" என்று அகலிகை கதறி யழுத

போது, கௌதமர் "இராமன் கால்கள் பட்டபோது விடிவுகாலம்" என்றார்.

"இப்படியாக இன்றைக்கு விடிவுகாலம். இனி மேலும் விடிவு காலமே. விதிவசத்தால் தீமை அனுபவித்து வருபவரும் இனி நலம் பெறுவர் அகலிகையைப் போல. இராமா! உன் அவதார மகிமை!" என்று முடிக்கிறார் விஸ்வாமித்திரர்.

இவ்வண்ணம் நிகழ்ந்த வண்ணம் இனி இந்த உலகுக்கெல்லாம்
உய்வண்ணம் அன்றி மற்றோர் துயர்வண்ணம் உறுவதுண்டோ?
மைவண்ணத்(து) அரக்கி போரில் மழைவண்ணத்(து)
அண்ணலே! உன்
கைவண்ணம் அங்குக் கண்டேன் கால்வண்ணம் இங்குக் கண்டேன்

[இவ்வண்ணம் - இவ்விதம்; உய்வண்ணம், உய்யும் வகை; மை வண்ணம் - கருநிறம்: மழை வண்ணம் - மேகம் போன்ற நிறம்.]

தாடகையும் கருப்புத்தான். இராமனும் கருப்புத் தான். ஆனால் கைம்மாறு கருதாது கருணை பொழிவதில் மேகம் போன்றவன்; மேகம் போன்ற கருப்பு. தாடகைக் கருப்பு—இராட்சதக் கருப்பு—கருவறுக்கும் கருப்பு.

கைவண்ணம் அங்குக் கண்டேன். கால் வண்ணம் இங்குக் கண்டேன் என்பதிலே திறமையையா போற்று கிறார்? இரண்டு சக்திகள் ஒருங்கு சேர்ந்ததை நினைவூட்டு கிறார். துஷ்ட நிக்ரகத்தையும், சிஷ்டபரிபாலனத்தையும் கண்டுவிட்டாரல்லவா?

இனி தீயோர் அழிக்கப் படுவர், நல்லோர் நலம் பெறு வர். தீயோர் அழிக்கப்படுவதும் அவர்கள் நன்மை கருதியே. ஆகவேதான் துயர் வண்ணம் உறுவதுண்டோ? என்று உறுதியாய்க் கேட்கிறார்.

இராமன்

"போதுநீ அன்னை" என்று
பொன்னடி வணங்கிப் போனான்.

அகலிகையை "தாயே!" என்று வணங்குகிறான் இராமன். "கௌதமன் கருணை உன்பால் இருக்கட்டும். முனிவருக்குப் பணிவிடை செய்வாய். துன்பத்தை நினைந்து துயருறாதே!" என்றான்.

நால்வரும் கௌதமரை யடைந்தார்கள்.

அஞ்சன வண்ணத் தான்தன் அடித்துகள் கதுவா முன்னம்
வஞ்சிபோல் இடையாள் பண்டை வண்ணத்த ளாகி நின்றாள்;
நெஞ்சினாற் பிழைப்பி லாளை நீயழைத் திடுக என்னக்
கஞ்சமா முனிவன் அன்ன முனிவனுங் கருத்துட்கொண்டான்.

[அடித்துகள் - கால்தூசி; கதுவா முன்னம் - அவள் மேல் படுவதற்கு முன்பே; கஞ்சமா முனிவன் அன்ன - தாமரை மலரிலே வாழ்கின்ற சிறந்த பிரம்மதேவனை ஒத்த.]

"பண்டை வண்ணத்தளாகிவிட்ட மனத்தினாலே குற்றம் செய்யாத இவளை நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்கிறார் விசுவாமித்திரர்.

'தீவினை நயந்து செய்த தேவர்கோன்' என்று முன்பே கவிஞன் கூறினான். இங்கே "நெஞ்சினாற் பிழைப்பிலாள்" என்கிறான். கற்பழியவில்லை. அழிக்கப் பட்டாள். வெறிகொண்ட இரும்புக் கரங்களுக்குள்ளே அகப்பட்டுக்கொண்டு பெண்மை கசக்குண்டு போய்விட்டது என்று இரக்கப்படுகிறான் போலும், பெண்ணின் பெருமை பேசும் கவிஞன்.

கௌசிகனது வேண்டுகோளை கௌதமரும் ஒப்புக் கொண்டு அகலிகையை ஏற்றுக்கொண்டார்.

## 11. சாரளந்தோறும் சந்திரோதயம்!

முனிவரைப் பின்பற்றிச் செல்லும் அரசிளங் குமரர்கள் மிதிலை நகரத்தின் அற்புதமான காட்சிகளை யெல்லாம் ஆனந்தமாகப் பார்த்துக் கொண்டே போகிறார்கள். கம்பன் காட்டும் கவிச் சித்திரங்கள் மூலமாக அவற்றை நாமும் காண்போம்.

மிதிலா நகரத்தின் கோட்டை மதில்கள் மேலுள்ள கொடிகள் மந்த மாருதத்தில் அசைந்து ஆடுகின்றன. அதைக் கண்ட கவி யுள்ளம் எப்படி யெல்லாம் எண்ணுகிறது பாருங்கள்!

"யான் செய்த பெருந்தவத்தால் திருமகள் செந்தாமரையை விட்டு நீங்கி சீதையாகி என்னிடம் வந்திருக்கிருள். விரைவில் வா" என்று மிதிலையாகிய பெண் தன் கரங்களாகிய கொடிகளை அசைத்து அழகனை வரவேற்பது போலிருக்கிறதாம்!

**'மையறு மலரின் நீங்கி, யான்செய்மா தவத்தின் வந்து**
**செய்யவள் இருந்தாள்' என்று செழுமணிக் கொடிக ளென்னும்**
**கைகளை நீட்டி அந்தக் கடிநகர் கமலச் செங்கண்**
**ஐயனை 'ஒல்லை வா!' என்(று) அழைப்பது போன்ற தம்மா.**

[மைஅறு - குற்றமற்ற; செய்யவள் - செந்நிறமுடைய திருமகள்; கடிநகர் - காவலை யுடைய நகரம்; ஒல்லை - விரைவாக.]

தொடர்ந்து வருகிறது இன்னொரு கவி

**நிரம்பிய மாடத்(து) உம்பர் நிறைமணிக் கொடிகள் எல்லாம்**
**'தரம்பிறர் இன்மை உன்னித் தருமமே தூது செல்ல,**
**வரம்பில்பே ரழகி னானை மணஞ்செய்வான் வருகின்றான்' என்(று)**
**அரம்பையர் விசும்பின் ஆடும் ஆடலின், ஆடக் கண்டார்.**

[நிரம்பிய - அழகு நிறைந்த; மாடத்து உம்பர் - உப்பரிகைகளின் மேலிடம்; நிரை - வரிசை; தரம் - தகுதி; உன்னி - நினைத்து; விசும்பின் - ஆகாயத்தில்; ஆடலின் - ஆடலைப்போல.]

அழகிலும் அன்பிலும், குணத்திலும், குலத்திலும் ஒத்தவர்கள் ஒன்று சேர்வது தருமத்தின் பயனல்லவா? இந்த அழகிக்குத் தகுதியான அழகன் இவனைத் தவிர வேறுயாருமல்ல என்ற காரணத்தால் தருமமே தூது செல்கிறதாம்! இவ்விருவரிடையே தூதாகச் செல்ல வேறு யாரும் தகுதி யில்லையாம்! அந்தப் பாக்கியத்தை வேறு யாரும் அடைந்து விடாது தானே யடைய எண்ணித் தருமதேவதை அந்தப் பணியை ஏற்றுக் கொண்டாளாம்!

மாட மாளிகைகளில் நின்று ஆடுகின்ற மணிக் கொடிகளின் தோற்றம், எல்லையற்ற அழகியை மணம்

புரிபவன் வருகின்றானென்று தேவமகளிர் நடனமாடுவதைப்போலிருக்கிறதாம்.

அழகின் தன்மையை அறிதலிற் சிறந்தவன் மன்மதன். அதை எடுத்துச் சித்தரித்துக் காட்டுவதிலும் அவனுக்கு அவனே நிகர். ஒரு சமயம் அவன் சீதையைப் போன்றதொரு சித்திரத்தை எழுத எண்ணினான். வரம்பில் பேரழகியை எழுத அமுதத்தையே வர்ணமாகத் தேர்ந்தெடுத்தான். எழுத ஆரம்பித்தான். ஆனால், ஒரு அவயவத்தைக் கூடச் சரியாக எழுத முடியாமல் திகைத்து விட்டான். கட்டழகனான மன்மதனாலும் எழுத முடியாத பேரழகி சீதை. அப்படிப்பட்ட சீதை தங்கி இருக்கும்படியான மிதிலையின் உள்ளே புகுந்தனர் மூவரும். மிதிலா நகரின் மதில்கள் பொன்னாலானவையாம். இயற்கை யழகும், செயற்கை யழகும் நிரம்பி திருமகள் வீற்றிருக்கும் செந்தாமரையைப் போலிருக்கிறதாம் நகரம்! ஆமாம், அங்கே சீதை யிருக்கிறாளல்லவா?

**ஆதரித்(து) அமுதிற் கோல்தோய்த்(து) அவயவம் அமைக்கும் தன்மை**
**யாதெனத் திகைக்கு மல்லால், மதனற்கும் எழுத ஒண்ணாச்**
**சீதையைத் தருத லாலே, திருமகள் இருந்த செய்ய**
**போதெனப் பொலிந்து தோன்றும் பொன்மதில் மிதிலை புக்கார்.**

[ஆதரித்து - (சீதையின் உருவத்தை யொத்த தொரு சித்திரத்தை வரைய) விரும்பி; ஒண்ணா - இயலாத: செய்ய போது - செந்தாமரை மலர்; பொலிந்து - விளங்கி.]

நகரின் உள்ளே புகுந்த முனியும் அரசிளங் குமரர்களும் இராஜ வீதியிலே செல்கிறார்கள். அந்த வீதி, இரத்தினங்களுக்கு இருப்பிடமான சமுத்திரம் போலவும், ஒளி விட்டுப் பிரகாசிக்கும் நட்சத்திரங்கள் நிரம்பிய ஆகாயத்தைப் போலவும் காணப்பட்டதாம். காரணம், எங்கும் ஆபரணங்கள் சிதறிக்கிடந்ததுதான். காதலின்பத்தைத் துய்க்கும்போது புலனின்பத்திற்கு இடையூறாயிருக்கும் ஏராளமான ஆபரணங்களை ஆடவரும் மகளிரும் கழற்றி யெறிந்து விடுகின்றனர். வறிஞர்கள் இல்லாததினாலே விரும்பி யெடுப்பாரில்லையாம்!

இசையைப் போன்ற சொற்களையுடைய பெண்கள் ஊடல் காரணமாக கழற்றி யெறிந்த மாலைகள் வண்டு களுடனே கிடக்கின்றனவாம்! பூமாலைகள் வாடிக் கிடப்பது, கணவனுடன் காதலின்பம் துய்த்தபின் மெல்லியர் மயங்கி உறங்குவது போலிருக்கிறதாம்!

இப்பொழுது மூவரும் ஒரு நாடக மேடையைக் காண்கின்றனர்.

நாட்டியம் நடந்து கொண்டிருக்கிறது. யாழ் நரம்பிலிருந்து எழுகின்ற இன்னிசை போன்ற வாய்ப் பாட்டிசை. மகர வீணையின் ஒலி. மத்தள ஓசை. இவை ஒன்றுடன் ஒன்று தழுவி ஒலிக்கின்றனவாம். இசைக் கேற்ப நுட்பமான இடையுடைய மகளிர் நடனமாடு கின்றனர். பலவகையான செய்திகளை அபிநயத்தின் மூலம் வெளியிடுகின்றனர். கைகள் செல்லும் வழியே கண்களின் குறிப்பு நோக்கும் செல்லுகிறது. கண்களின் பார்வை செல்லும் வழியே மனத்தின் குறிப்பும் செல்லுகிறது.

மனத்தின் வழி கண் செல்லவில்லையாம். கண்வழி மனம் செல்லுகிறதாம். அவ்வளவு பயிற்சி; கை தேர்ந்த வர்களல்லவா?

நடனமாடுவது போன்ற ஓசை இன்பத்தைத் தருகின்ற பாட்டு வருமாறு:

> **நெய்திரள் நரம்பின் தந்த மழலையின் இயன்ற பாடல்**
> **தைவரு மகர வீணை தண்ணுமை தழுவித் தூங்கக்**
> **கைவழி நயனம் செல்லக் கண்வழி மனமும் செல்ல**
> **ஐயநுண் இடையார் ஆடும் ஆடக அரங்கு கண்டார்.**

[நெய்திரள் நரம்பின் - நெய்யின் ஒழுக்குப் போல், திரண்ட வடிவமாகவுள்ள யாழ் நரம்பு; தைவரு - தடவுகின்ற; தண் ணுமை - மத்தளம்; தூங்க - ஒலிக்க; ஐய நுண் இடையார் - உண்டோ இல்லையோ என்று சந்தேகப்படுகிற மாதிரி நுட்பமான இடையை உடையவர்; ஆடகம் - பொன்; அரங்கு - நடன சாலை.]

வீதிகள்தோறும் அழகிய பூஞ்சோலைகள். மரகதப் பசு நிறமான பாக்கு மரங்கள். பவழம் போன்று

நிறமுள்ள காய்கள். பாக்கு மரங்களிலே கட்டப்பட்ட ஊஞ்சல்கள். ஊஞ்சல் விசையாக ஆடுகிறது. மகளிர் அணிந்துள்ள மலர் மாலைகளிலிருந்து வண்டுகள் மேலெழுந்து ரீங்கார மிடுகின்றன. பெண்களின் மெல்லிய இடை இந்த வேகத்தைத் தாங்காது என்று இரங்கிப் பொங்குகின்றனவாம் அவை! மாலையே அதிகக் கனம். அதோடு தம் பாரமும் சேரலாகாது என்று வண்டுகள் எண்ணியே மேலெழுந்து விட்டனவாம்! இவ்வாறு ஊஞ்சல் ஆடும் மகளிரைக் கண்ட காளையர் மனம், காதல் மிகுதியால் அவர்களை விடாது அலைவதால் "மைந்தர் சிந்தையோடு" ஊஞ்சலாடுகிறார்களாம்! ஊஞ்சல் மேலும் கீழும் போய் வருவதானது குற்றம் மிகுந்த பிறப்பு வருவதும் போவதுமாயிருப்பது போல இருக்கிறது என்று கவிஞன் கற்பிக்கிறான்.

**பூசலின் எழுந்த வண்டு மருங்கினுக்(கு) இரங்கிப் பொங்க,**
**மாசுறு பிறவி போல வருவது போவ தாகிக்**
**காசறு பவளச் செங்காய் மரகதக் கமுகிற்பூண்ட**
**ஊசலின் மகளிர், மைந்தர் சிந்தையோ(டு) உலவக் கண்டார்.**

[பூசல் - ஆரவாரம்; மருங்கு - இடை; மாசு உறு - குற்றம் மிகுந்த; காசு அறு - குற்றமற்ற; ஊசல் - ஊஞ்சல்.]

இப்படிப் பல காட்சிகளையும் பார்த்துக் கொண்டே போகிறார்கள் மூவரும்.

இவர்கள் புதிதாக வருபவர்களல்லவா? அத்துடன் வழி நடந்த களைப்புடன் காணப்படுகின்றனர். இதனைக் கண்ட மங்கையர் சிலர் இனிய தேனைப் பருகுவித்து "இனிது" செல்ல வழி செய்கிறார்கள். எப்படி?

**வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ, மாடகம் பற்றி வார்ந்த**
**கள்ளென நரம்பு வீக்கிக் கையொடு மனமுங் கூட்டி,**
**வெள்ளிய முறுவல் தோன்ற, விருந்தென மகளிர் ஈந்த**
**தெள்விளிப் பாணித் தீந்தேன் செவிமடுத்(து) இனிது**
**சென்றார்.**

[வள் உகிர் - கூர்மையான நகங்களை யுடைய; மாடகம் - நரம்புகளை முடுக்கும் ஆணி; வார்ந்த கள் என நரம்பு வீக்கி - ஒழுகுகின்ற தேன் தாரை போன்ற அவ் யாழ் நரம்புகளை

இறுக்கிக் கட்டி ; முறுவல் - புன் சிரிப்பு ; தெள்விளி - தெளிவான இசை ; (தெள்விளி என்பது ஒரு ராகத்தின் பெயர்.) பாணி - இசையோடு கூடிய பாட்டு ; மடுத்து - உண்டு.]

நரம்புகளை முடுக்கி விடுதலால் தளிர்க்கைகள் வலிக்கின்றனவாம்! மென்மையான மலர்க் கரங்களல்லவா? கையும் சிந்தனையும் ஒன்றிப் போயிருக்கின்றனவாம். பாட்டிலேயே மனத்தைப் பொருத்தி விசைபடக் கையைச் செலுத்தினல்தானே இசை யமுதமாகக் கிளம்பும்? மனத்தையும் கரத்தையும் ஒருங்கு செலுத்தி உல்லாசமாகப் பாடுகிறார்களாம். வெண் முறுவல் தோன்றுகிறதல்லவா? இசைவாணிகளுக்கு இயல்பாக உண்டாகும் மகிழ்ச்சியும் கனிந்த பார்வையும், புன் முறுவலும் விருந்தினர்களுக்காக என்று கவி கற்பித்துவிட்டான்! விருந்தாக மகளிர் பொழிந்த தேனை, செவியாரப் பருகினார்களாம். அடுத்தாற்போல் காட்சி ஒன்றையும் கண்ணாரக் காண்கிறார்கள்.

வீதியிலே செல்கிற கட்டழகர்களான ராஜகுமரர்களையும் முனிவரையும், வீடுகளின் உப்பரிகைகளிலுள்ள சாளரங்களின் வழியாகப் பெண்கள் பார்க்கிறார்களாம். படீர் படீர் என்று சாளரக் கதவுகள் திறக்கப்பட்ட ஒலியினல் நடந்து செல்கிற மூவரும்கூட மேல் நோக்கிப் பார்த்தார்களாம். அவர்கள் கண்டதென்ன? ஒவ்வொரு பலகணியிலும் ஒவ்வொரு சந்திரன்!

வேல்போன்ற விழிகள் ; மன்மதன் வில்லைப் போன்ற புருவங்கள். வண்டுகள் மொய்க்கின்ற கருங் கூந்தல், சிவந்த வாய்.

இவ்வளவும் கொண்ட, நெடுங் காலக் களங்கம் நீங்கிய சந்திரன்!

"சந்திரனுக்குக் களங்கம் உண்டு. இரவில் தான் பிரகாசிப்பான். இங்கு இவ்வளவு ஒளியுடன் பகலில் பிரகாசிக்கிறனே? களங்கமற்ற பூர்ண சந்திரோதயம்! அதுவும் தவிர சந்திரன் ஒருவன் தானே?" இப்படியெல்லாம் வியப்புற்று யோசித்த பின்னரே சந்திரோதய

மெல்லாம் பெண்களின் முகங்கள் என்று இவர்கள் கருதி யிருக்க வேண்டும்.

> வாளரம் பொருத வேலும் மன்மதன் சிலையும், வண்டின்
> கேளொடு கிடந்த நீலச் சுருளும், செங் கிடையும் கொண்டு,
> நீள் இரு களங்கம் நீக்கி ; நிரைமணி மாட நெற்றிச்
> சாளரந் தோறுந் தோன்றும் சந்திர உதயம் கண்டார்.

[வாள் அரம் பொருத வேலும் - அராவப்பட்ட வேலாயுதத்தையும் ; சிலை - வில் ; செங்கிடை-நீரில் இருக்கும் ஒரு வகைச் செடி. சிவந்த பூக்கள் நிரம்பியது, அதரத்திற்கு எடுத்துக் காட்டாகக் கூறுவது. கேள் - இனம் ; நீள் இரு - நெடுங்காலமாக உள்ள ; நிரை - வரிசை ; நெற்றி - உப்பரிகை.]

ஒருபுறம் மகளிர் பந்தாடிக் கொண்டிருக்கின்றனர். அந்தப் பந்து, தனக்கு என்று இயற்கையாக உள்ள குணத்தை மறைத்துத் தன்னை வந்தடைந்து பொருள் தருகிற ஆடவனது குணத்தையே வெளிக்குக் காட்டுகிற, அதாவது ஆடவன் மீது ஆசையில்லாதிருந்தும் ஆசை யிருப்பதாக நடிக்கிற விலை மாதருடைய மனம்போலவும், தன் முன் இருக்கும் பொருளை நிறத்தோடு அப்படியே காட்டுகின்ற கண்ணாடி போலவும் இருந்ததாம். அந்த வெண்மையான பந்து, மகளிரின் மை தீட்டிய செவ்வரி பரந்த நீண்ட கண்களின் கரிய பார்வை படும்போது கருப்பாகவும், அவர்களின் சிவந்த கைகளுக்கு வந்து சேருகிற பொழுது செந்நிறமாகவும் தோன்றுகிறதாம் !

> மெய்வரு போகம் ஒக்க உடனுண்டு விலையும் கொள்ளும்
> பைஅர(வு) அல்கு லார்தம் உள்ளமும் பளிங்கும் போல
> மையரி நெடுங்கண் நோக்கம் படுதலும் கருகி வந்து
> கைபுகிற் சிவந்து காட்டும் கந்துகம் பலவுங் கண்டார்.

[மெய்வரு - உடலினால் உண்டாகிற ; உடன் உண்டு - கூட அனுபவித்து ; மைஅரி - மை இடப்பட்டுள்ள ; கந்துகம் - பந்து.]

கண்ணாடிக்குப் பக்கத்திலுள்ள பொருளின் நிறம் கண்ணாடியில் இல்லாவிட்டாலும் உள்ளது போலத் தோன்றுகிறதல்லவா ? அதைப்போலப் பெண்களின் கண் மை நிறமும், கைகளின் நிறமும் இல்லாதிருந்தாலும் உள்ளது போலக் கவி கற்பிக்கிறான்.

மற்றும், யானைகள் போர் புரிதல், கடை வீதிகள், மகளிர் நீராடுதல் முதலிய பலவற்றையும் கண்டனர்.

ஒரு பூம் பொழிலையும் கண்டார்கள். அது எப்படிப் பட்ட பூம்பொழில்?

**பாகொக்கும்சொற் பைங்கிளி யோடும் பல பேசி,**
**மாகத்(து) உம்பர் மங்கையர் நாண மலர் கொய்யுந்**
**தோகைக் கொம்பின் அன்னவர்க்(கு) அன்னம் நடை தோற்றுப்**
**போகக் கண்டு வண்டினம் ஆர்க்கும் பொழில்கண்டார்**

[மாகத்து - பெரிய ; உம்பர் - மேல் உலகம் ; தோகை - மயில் ; ஆர்க்கும் - ஆரவாரம்.]

அந்த இன்பப் பொழிலிலே உள்ள பெண்கள் சர்க்கரைப் பாகைப் போன்று இனிமையான சொற்களைப் பச்சைக் கிளிகளுடன் பேசுகிறார்களாம். கிளிகள் இனிமையாகப் பேச மாதர்களுடன் பேசிப் பேசிப் பழகிக் கொள்கின்றனவாம். தேவப் பெண்கள் வெட்கமுறும் படி இவர்கள் அவ்வளவு அழகாயிருக்கிறார்களாம். சாயலில் மயில் போன்றவர்கள் ; மென்மையில் பூங்கொம்பைப் போன்றவர்கள். நடையழகில் இவர்களுக்கு இவர்களே தான் இணை. நடையைக் கண்டு அன்னம் தோற்று ஓடுகிறது! இவற்றைக் கண்டு வெற்றிச் சங்கம் முழங்குவது மாதிரி வண்டுகள் பேரொலி செய்கின்றனவாம்.

---

## 12. பெண் கனி

முனிவரும் அரசிளங் குமரர்களும் போய்க் கொண்டிருந்தார்கள். சிறிது தூரத்திற்கப்பால், பெரிய கன்னியா மாடத்திற்கருகில் சென்று நின்றார்கள்.

பொன்னும் ஒளியும், பூவும் நறு மணமும், தேனும் ருசியும், திருத்தமான சொற்களிலமைந்த கவியும் இன்பமும், ஒன்றையொன்று இணைந்துகொண்டிப்பதுபோல-பெட்டையன்னங்களும் ஆண் அன்னங்களும் ஆனந்தமாக விளையாடும் கன்னிமாடத்தின் முன்பாகத்தைக் கண்

டார்கள். பொன்னின் ஒளி, மலரின் மணம், தேனின் இன் சுவை, கவி இன்பம் இவ்வளவும் ஒருங்குசேர்ந்த அன்னம் போன்ற சீதை, அன்னங்கள் விளையாடுவதைப் பார்த்துக்கொண்டிருந்தாளாம்.

பொன்னின் சோதி போதினில் நாற்றம் பொலிவேபோல்
தென்னுண் தேனின் தீஞ்சுவை செஞ்சொற் கவி இன்பம்
கன்னிம் மாடத்து(து) உம்பரின் மாடே, களிபேடோ(டு)
அன்னம் ஆடும் முன்துறை கண்டாங்(கு) அயல் நின்றார்.

[போது - பூ; நாற்றம் - நறுமணம்; பொலிவு - அழகு; தென் உண்-வண்டுகளுண்ணுகின்ற; உம்பரின் மாடே - மேலிடத்தில்; அயல் - அருகில்.]

எல்லா இன்பங்களுக்கும் மேலாகக் கவி இன்பத்தைக் கொண்டுவந்து நிறுத்தியிருக்கிறான் கவிஞன்.

ஒவ்வொரு பொருள்களிலும் சிறந்தவை இங்கே சீதைக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளன.

சீதையின் அழகுக்கு உவமை சொல்ல முடியாது என்று கம்பன் கூறுகிறான். எல்லாப் பெண்களுக்கும் யாவராலும் உபமானமாகச் சொல்லப்படுகிற இலக்கு மிக்கு யாரை உவமை கூறுவது? அவளுக்கு அவளே நிகர். இமையாக் கண்கள் பெற்ற தேவர்களே அவளழகைப் பருக இரு கண்கள் போதாவென்று எண்ணும் போது மனிதர்கள் எப்படி முற்றிலும் காணமுடியும்?

'மானைப் போன்ற மருண்ட பார்வை யுள்ளவள்' என்று சிறந்த பெண்களைப் பற்றிப் புலவர்கள் கூறுவார்கள். அந்த அழகிய மானையும் பார்வையிலே வென்றவள் சீதை. கூரிய வேலையும், வாளையும் நிகர்த்த கண்கள். பிற மகளிர் கண்களுக்கு உவமை கூறும் கயல் மீன்களும் அஞ்சும்படி பிறழ்கின்ற கண்களை யுடையவள். அக்கன்னியா மாடத்தின் மேலிடம் பெற்றதொரு அமுதத்தை யொத்தவள்.

வென்றம் மானைத் தாரயில் வேலும் கொலைவாளும்
பின்றம் மானப் பேர்கயல் அஞ்சப் பிறழ்கண்ணாள்
குன்றம் மாடக் கோவின் அளிக்கும் கடலன்றி,
அன்றம் மாடத்து உம்பர் அளிக்கும் அமுதன்னாள்.

[தார் அயில் - வெற்றி மாலையணிந்த கூர்மை யுடைய; பின்ற - பின்னிடும்படி; குன்றம் ஆடக் கோவின் அளிக்கும் கடலன்றி - மந்தரமலை சுழலக்கோ வென்னும் ஆரவாரத் தோடு அமுதத்தைத் தந்த கடலினுலன்றி.]

கட்டழகிகளான தோழிமார்கள் பலர் "செங்கைத் தளிர்மானே! தேனே! அமுதே!" என்றெல்லாம் அன்புடன் விளித்து, நடந்து செல்லும் வழிகளில் மலர் தூவுகிறுர்கள், மெல்லிய பாதம் நோவாதிருக்க. மகரந்தம் கமழும் மலர்க்குவியலில் ஒதுங்கி ஒதுங்கி நடந்து, பொலிகின்ருள் பொன்னின் சோதி.

**தன்னே ரில்லா மங்கையர் "செங்கைத் தளிர்மானே!**
**அன்னே! தேனே! ஆரமிர் தே!" என்(று) அடிபோற்றி**
**முன்னே முன்னே மொய்ம் மலர் தூவி முறைசார்ப்**
**பொன்னே சூழும் பூவின் ஒதுங்கிப் பொலிகின்ருள்.**

[அன்னே - தாயே; ஆரமிர்தே - அரிய அமுதமே; மொய் - நெருக்கம்; முறை சார - முறையாக நிரம்பி நிற்க.]

மெல்லிய பூங்கொடி போன்ற பெண்கள் சூழ நிற்கிருளாம் சீதை. இது, நூறு கோடி மின்னல்கள் சூழ்ந்து நின்று குற்றேவல் செய்ய, இடையே நின்ற தொரு மின்னரசு எனத் தோன்றுகிறதாம்!

கொல்லவல்ல வேல், யமன் என்னும் இவை யெல்லாவற்றையும் வென்று விடும் விழி கொண்டவளாம் சீதை. மலை, சுவர், கல், புல் முதலிய சாதாரணப் பொருள்களும் அழகைக்கண்டு உருகும்படியான பெண்ணுருக் கொண்ட கனி போன்றவளாம் பிராட்டி. இப்படி யென்ருல் நேரில் கண்டு கொண்டிருப்பவர்கள் கண்படைத்த பயனை எண்ணி எண்ணி உருகுவார்களல்லவா? தேனைச் சுவைக்கும் பழங்கள் பெண்ணுக உருக் கொண்டால் அதன் இன்பச் சுவைய்யை எவ்வாறு எடுத்துச் சொல்லமுடியும்?

**கொல்லும் வேலும் கூற்றமு மென்னும் இவையெல்லாம்**
**வெல்லும் வெல்லும் என்னும் மதற்கே விழிகொண்டாள்**
**சொல்லும் தன்மைத் தன்று அது குன்றும் சுவரும்திண்**
**கல்லும் புல்லும் கண்டுரு கப்பெண் கனி நின்ருள்.**

**அழகெனும் அவையும் ஓரழகு பெற்றவே**

என்று கவிஞன் கூறுகிறான். சீதை அணிந்துள்ள ஆபரணங்கள் அவளுக்கு அழகைத் தரவில்லை. அவள் அணிந்ததால் ஆபரணங்களே அழகு பெற்றனவாம்!

---

## 13. கண் வழிப் புகுந்த காதல் நோய்

கன்னிமாடத்தின் மேல் நின்றிருந்தாள் கட்டழகி சீதை. மிதிலா நகரைப் பார்வையிட்ட வண்ணம் அவ்வீதி வழிச் செல்கிறார்கள் முனிவரும், அரசிளங் குமரர்களும். கன்னி மாடத்தின் அருகிற் சென்ற இராமன் மேலே பார்த்தான். அதே சமயம் சீதையும் பார்த்துவிட்டாள். இதை

. . அண்ணலும் நோக்கினான்
அவளும் நோக்கினாள்.

என்று கம்பன் கூறுகிறான். எவ்வளவோ விஷயங்களை இந்த ஒரே அடியில் அழகாக எடுத்துக் காட்டி விட்டான் கவிஞன்.

அப்படிப் பார்த்தவுடன், கண்ணோடு கண்கள் கவ்வி ஒன்றையொன்று உண்ணுகின்றனவாம்! இருவரது அறிவும் நிலை கலங்கித் தத்தளிக்கின்றனவாம். பிறகு அப்படியே ஒன்றிப் போகின்றனவாம்.

கதாநாயகியையும், நாயகனையும், கவிஞன் முதல் முதலாகச் சந்திக்கச் செய்கிற இடம் இது தான்.

கவிஞன் காட்டும் காதல் சித்திரம் இது :

எண்ணரு நலத்தினாள் இனையள் நின்றுழிக்
கண்ணொடு கண்ணிணை கவ்வி ஒன்றையொன் று)
உண்ணவும் நிலைபெறு( து ) உணர்வும் ஒன்றிட,
அண்ணலும் நோக்கினான், அவளும் நோக்கினாள்.

[எண்ணரு நலத்தினாள் - மனத்தினால் நினைத்திடுவதற்கும் அருமையான அழகையுடைய; இனையள் நின்றுழி - இத்தன்மையளாய் நின்ற பொழுது.]

காதலர்கள் பேசவேண்டிய விஷயங்கள் எவ்வளவோ உண்டு. பேசி மாளாத விஷயங்கள்! அவற்றைப் பேசித் தீர்க்கவேண்டிய வேலையைக் கண்கள் ஏற்றுக்கொள்கின்றன. கண்கள் பேசிவிட்டால் பிறகு வாயால் பேச வேண்டிய அவசியம் கூட இல்லையாம்.

முதலில் கண்கள் ஒன்றையொன்று சந்தித்துக் கவ்விக் கொண்டன. இப்பொழுது கண்கள் இடம் மாறிப் பாய்கின்றன.

நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேலிணை
ஆக்கிய மதுகையான் தோளில் ஆழ்ந்தன;
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்,
தாக்(கு) அணங்(கு) அனையவள் தனத்தில் தைத்தவே.

[நுதி கொள் வேலிணை - கூர்மையான இரண்டு வேலாயுதங்கள்; ஆக்கிய - வளர்ந்த, மதுகையான் - வலிமையுடைய; வீக்கிய கனை கழல் - கட்டப்பட்ட ஒலிக்கின்ற வீரக் கழல்; செங்கணும் - சிவந்த கண்களும்; தாக்கு அணங்கு; மோகினி.]

கூரிய வேலாயுதங்களான சீதையின் கண்கள் இராமனது * தோட்களிலே பாய்ந்தன. இராமனின் கண்களும் அவளின் தனத்தில் தைத்தனவாம்.

கண்களுக்குக் கண்கள் பேசிக் கொண்டன. இப்பொழுது இதயத்துக்கு இதயம்! ஒருவர் மற்றவருடைய இதயத்துக்குள் மாறிப் புகுந்து விடுகிறார்கள், பாருங்கள்!

பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்(து)
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்,
வரிசிலை யண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக்(கு) இதயம் எய்தினர்.

[பாசம் - கயிறு; ஈர்த்தல் - இழுத்தல்; வரிசிலை அண்ணல் - வில்லையுடைய இராமன்]

---

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்,
என்ன பயனும் இல.—தமிழ் மறை.

* பெண்களுக்குத் தனம் போல ஆட்வர்க்குத் தோள்கள் வேட்கை மிகுவிக்கும் அங்கமாம்.

தணியாத தாகம் காதலுக்கு. ஒருவர் அழகை ஒருவர் அள்ளி அள்ளிப் பருகுகிறார்களாம். அப்படிப் பருகிய நோக்கு, என்கிற பாசத்தால் இரண்டு உள்ளங்களும் கட்டப்பட்டு விட்டனவாம். ஒன்றையொன்று இழுக்கின்றனவாம். இரண்டு மனங்களும் ஒன்றாய்விட்டன.

ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் படையுடன் எதிரியின் மனக் கோட்டைக்குள் புகுந்து பிடித்துக் கொள்கிறார்கள். தலைவனுக்கு விற்படை சொன்னவன் தலைவிக்கும் வாட்படை கூறி ஒத்த பண்பைக் காட்டி வருகிறான் போலும்!

"மாறிப்புக்கு இதய மெய்தி"ய இக்கவி நம் இதயத்தை அப்படியே கொள்ளை கொண்டு போகிறது.

அவனுக்கும் ஒன்று இல்லையாம். அவளுக்கும் ஒன்று இல்லையாம். வசையில்லாத ஐயன் அவன். அவள் இடையில்லா நங்கை. இருவரும் இரண்டு உடல் ஒருயிர் என்றாயினர். திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருந்த அவர்கள் வெகு நாள் பிரிந்திருந்து இப்பொழுது சந்தித்து விட்டார்கள். பேசுவதற் கென்ன விருக்கிறது?

> **மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்**
> **ஒருங்கிய இரண்டுடற்(கு) உயிரொன்(று) ஆயினர்**
> **† கருங்கடற் பள்ளியிற் கலவி நீங்கிப்போய்ப்**
> **பிரிந்தவர் கூடினாற் பேசல் வேண்டுமோ?**

[மருங்கு - இடை; (இடை உண்டோ இல்லையோ என்று எண்ணும்படி நுண்ணிய இடை) ஒருங்கிய - ஒற்றுமைப்பட்ட.]

தன் உள்ளத்தை அப்படியே பறிகொடுத்து விட்டாள் சீதை. உடனே அவனைக் கட்டித் தழுவவேண்டுமென்று கருதினாள். முடியவில்லை. பதுமைபோன்று நின்று விட்டாள். இராமன் முனியுடன் போய்விட்டான். நெடுந்தூரம் போய்விட்டார்கள். கண்ணுக்கு மறைந்தே விட்டார்கள். அடடா! இராமன் போனவன் சும்மாப்

---

† திருப்பாற்கடல் வெண்மை நிறமானது என்றாலும் அது திருமாலின் திருமேனி நிழலால் கருப்பாகக் காணப்படுவதால் கருங்கடல் என்று சொல்லப் பட்டது.

போகவில்லை. கள்வன்! சீதையின் சிந்தை, உறுதி, உடலின் அழகு அவ்வளவையும் அப்படியே அள்ளிக் கொண்டே போய்விட்டான்!

**அந்தமில் அழகனை அணங்கி லாமையால்,**
**பைந்தொடி ஓவியப் பாவை போன்றனள் :**
**சிந்தையும் நிறையும்மெய்ந் நலனும் பின்செல,**
**மைந்தனும் முனியொடு மறையப் போயினன்.**

[அந்தமில் - எல்லையில்லாத ; பைந்தொடி - பொன்னாலாகிய தொடி என்னும் வளையலையணிந்த ; ஓவியப் பாவை - சித்திரப் பதுமை ; நிறை - மன ஆற்றல் ; மெய்ந்நலன் - உடம்பின் அழகு.]

சீதையின் கண்களுக்கு இராமன் மறைந்து விட்டான். மனம் என்கிற மதம் கொண்ட யானை கட்டுக்கடங்காமல் அவன் பின்னேயே போய்விட்டது. உடனே நிறை-கற்பு என்கிற அங்குசத்தை யானையின் காதில் மாட்டி இழுத்தாள். யானை அங்குசத்தை நிமிரப் பண்ணித் தள்ளிவிட்டுத் தன் வழியே போய்விட்டது. இதனால் அவள் பெண்மை தொலைந்து விட்டதாம்! பெண்மைக் குணங்களான நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு இவை மதம் பிடித்த யானையாகிய மனத்தின் முன்னே செயலிழந்து விட்டனவாம்!

**பிறையெனும் நுதலவள் பெண்மை என்படும்?**
**நறைகமழ் அலங்கலான் நயன கோசரம்**
**மறைதலும், மனமெனும் மத்த யானையின்**
**நிறையெனும் அங்குசம் நிமிர்ந்து போயதே!**

[பிறை-பிறைச் சந்திரன் ; நுதல் - நெற்றி ; நறைகமழ் அலங்கலான் - நல்ல வாசனை வீசுகிற மலர் மாலையுடைய இராமபிரான் ; நயன கோசரம் - கண்ணின் பார்வை.]

காதல் படிப்படியாக வளர்ந்து நோயாகி மாறித் தன் வலிமையை எப்படியெல்லாம் காட்டுகிறது என்பதைப் பாருங்கள் :

சீதையின் இடை மெல்லியது ; மிகவும் தளர்ந்தது. அதைப்போல், மனமும், உடலும் தளர்ந்து போய்விட்டனவாம் காதல் காரணமாக. நீர் ஓரிடத்திற் சென்று பரவுவதற்கு வாய்க்கால் வழியாகிறதல்லவா? அதைப் போல

ஆசை-காதல் மனத்தில் போய்ப் பரவ கண்கள் வழியாகி விட்டனவாம். கண் வழிப் புகுந்த காதல் நோய் பாலில் ஊற்றப்பட்ட பிரையைப் போல உடல் முழுவதும் பரந்து விட்டதாம். காதல்நோய் மனத்தையு மட்டுமல்ல, உடலேயே வருத்த ஆரம்பித்து விட்டது.

மாலுற வருதலும், மனமும் மெய்யும் தன்
நூலுறு மருங்குல்போல் நுடங்கு வாள்நெடுங்
காலுறு கண்வழிப் புகுந்த காதல்நோய்,
பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே.

[மாலுற - திருமால் வர ; நூலுறு - நூலிழையை யொத்த ; மருங்குல் - இடை ; காலுறு - வாய்க்காலே யொத்த ; பாலுறு - பாலில் ஊற்றப்பட்டது.]

கன்னி சீதை கலங்குகிருள், துடிதுடிக்கிருள். விஞடிக்கு விஞடி அதிகப்பட்டுக்கொண்டுவருகிற காமநோயை அவள் யாரிடம் சொல்லுவாள் ? ஊமைகள் போல் மனத்திடையே எண்ணி விம்முகிருள், வெதும்புகிருள். அடடா, இந்த சந்தர்ப்பத்தில் தான், காமன் அக்கன்னியின் மனத்திலே ஒரு அம்பை எய்து விட்டான், எரிகிற தீயினிடையே விறகை எடுத்துப் போட்ட மாதிரி.

நோம்உறு நோய்நிலே நுவல கிற்றிலள்
ஊமரின் மனத்திடை உன்னி விம்முவாள் :
காமனும் ஒருசரங் கருத்தில் எய்தனன்,
வேமெரி யதனிடை விறகிட் டென்னவே.

[நோம் - வருந்துவாள் ; உறு - அதிகப்படுகின்ற ; நுவல கிற்றிலள் - சொல்லமாட்டாதவளாய் ; ஊமர் - ஊமைகள் ; வேமெரி - எரிகிற நெருப்பு.]

காம நோய் அதிகப்படுகிறது. முடித்த கூந்தல் சரிகிறது. உடை தளர்கிறது. நெருப்பிலே போடப்பட்ட பூங்கொடி போல வதங்குகிருள்.

நிழலிடு குண்டலம் அதனின் நெய்யிடா
அழலிடா மிளிர்ந்திடும் மயில்கொள் கண்ணிஞள்
சுழலிடு கூந்தலும் துகிலும் சோதரத்
தழலிடு வல்லியே போலச் சாம்பிஞள்.

[நிழலிடு குண்டலம்-ஒளி வீசுகிற காதணி; நெய்யிடா அழலிடா மிளிர்ந்திடும் - நெய் தடவப் பெறாமலும், நெருப்பிலிட்டுக் காய்ச்சப்படாமலும் கூர்மையாய்விளங்கும் வேல் இருக்குமாயின் அதனை யொத்த கண்களையுடையவள்.]

நோய் உடலைப்பற்றித் தகிக்கிறது, உடல் மெலிந்து விட்டது. வளைகள் கழன்று விழுந்துவிட்டன. உடை விழுந்து விட்டது. இவை மட்டுமா? மன உறுதி, வாட்ட மடைந்த மனம், உடலின் பள பளப்பு, இவற்றையும் இழந்தாள். ஆஹா! பெண்ணின் சிறந்த பொருள்கள் யாவற்றையும் இழந்து விட்டாளே. தேவர்கள் கடைந்த பொழுது தன்னிடமிருந்த சிறந்த பொருள்களை யெல்லாம் கொடுத்து விட்ட கடல் போல வறியள் ஆயினள்.

தழங்கிய * கலைகளும் நிறையும் சங்கமும்
மழுங்கிய உள்ளமும் அறிவும் மாமையும்
இழந்தனள் இமையவர் கடைய யாவையும்
வழங்கிய கடலென வறிய ளாயினள்

[தழங்கிய - ஒலிக்கின்ற: கலைகள் - உடைகள்; நிறை - உறுதி; சங்கம் - சங்காலாகிய வளையல்கள்; மாமை - உடம்பின் பளபளப்பு; வறியள் - ஏழ்மை]

வேடனது அம்பால் அடிபட்ட மான்போல சீதை துடிதுடிக்கிருள். தோழிமார் கண்டனர். இன்னதென்றறியாமல் திகைத்தனர். மயில்போன்ற மங்கையைக் கைகொடுத்து அழைத்துச் சென்றனர்.

காதொடுங் குழைபொரு கயற்கண் நங்கைதன்
பாதமும் கரங்களும் அனைய பல்லவம்
தாதொடுங் குழையொடும் அடுத்த தண்பனிச்
சீதநுண் பனிமலர் அமளிச் சேர்த்தினர்.

[அமளி - படுக்கை.]

சீதையின் கால்களும் கைகளும் எவ்வளவு மிருதுவாக இருக்கின்றனவோ அவ்வளவு மிருதுவான, பல்லவமென்னும் செந்தளிர்களுடனும் பூந்தாதுகளுடனும் கூடிய படுக்

* கலைகள் என்று பன்மையாகக் கூறியது, பெண்களும் மேலாடை இடையாடை என இரண்டு அணிதல் வழக்கமாதலின்.

கை. அதிலே மிகக் குளிர்ச்சியான பனிநீர்த்துளி தெளிக்கப் பட்டிருக்கிறது. சீதையைக் கைத் தாங்கலாக அழைத்துக் கொண்டு போய் அந்தப் படுக்கையில் சேர்த்தார்கள் தோழிகள்.

மலர்ப்படுக்கை சீதையின் வெப்பம் தாங்காது கருகி விட்டது. சீதை கட்டிலில் கிடந்தாள், பாம்பால் விழுங்கப் பட்ட சந்திரனைப்போல. பனிப் புயலால் தாமரை ஒளி யிழந்து கிடப்பது மாதிரி மங்கிக் கருகிக் கிடந்தாள்!

காம நோய் காரணமாக வியர்வை அரும்புகிறது. முத்து முத்தாக வடிகிறது. கொல்லனின் உலைக் களத்துக் காற்றுப்போல எழுகிற அவளது வெப்பம் மிகுந்த மூச் சுக் காற்றினால் வியர்வை ஆவியாகப் போகிறதாம்!

உள்ளத்தில் காமத்தீ கொழுந்து விட்டு உடலை வருத்து கிறது. அதே சமயத்தில் அம்பை எய்துவிட்டான் காமன். ஈவு இரக்கமற்ற வேடனால் தாக்குண்ட மயில் போன்று குழைந்து சாய்ந்தனள் சீதை.

அடுத்து என்ன வாயிற்று?

காமத்தீ அதிகப்பட்டு விட்டது. படுக்கையில் கிடந்த மென்மையான புஷ்பங்கள் உடம்பில் முள்ளைப் போன்று தைத்தன. உடலில் பூசப்பட்டிருந்த சந்தனம் நெற்பொரி மாதிரி விண்டு விண்டு சிதறிற்று. ஆபரணங்களுக்கு இடையில் கோக்கப்பட்டிருந்த நூல் அறுந்து விட்டது. அணிகலன்கள் அவிழ்ந்தன. பல்லவத் தளிர்கள் கரிந்து விட்டன.

**சொரிந்தன நறுமலர், சுறுக்குண் டேறின,**
**பொரிந்தன கலவைகள் பொறியிற் சிந்தின,**
**எரிந்தவெங் கனல்சுட இழையிற் கோத்தநூல்**
**பரிந்தன கரிந்தன பல்ல வங்களே.**

[கலவைகள் - கலவைச் சந்தனங்கள்; இழை - ஆபரணங்க ளில் நூல் கோக்கிற துவாரம்; பரிந்தன - நீங்கின.]

உயிருக்குயிரான தோழிமார்கள் சுற்றி நின்று எவ் வளவோ உபசாரம் செய்கிறார்கள். நோய் இன்னதென்

றறியாது என்ன செய்து என்ன? திருஷ்டி பட்டுவிட்ட தென்று கருதி ஆலத்தி சுற்றி எடுத்தனர். வேறென்ன தான் செய்யமுடியும்!

தாதியர் செவிலியர் தாயர் தவ்வையர்
மாதுயர் உழந்துழந்து அழுங்கி மாழ்கினர்
யாதுகொல் இதுவென எண்ணல் தேற்றலர்
போதுடன் அயினிநீர் சுழற்றிப் போற்றினர்.

[தாதி - அடியவள்; செவிலியர் - வளர்க்கும் தாய்மார்; தாயர் - ஆட்டுவாள், ஊட்டுவாள், ஒலுறுத்துவாள், நொடி பயிற்றுவாள், கைத்தாய் என ஐவகைத் தாயர்; மாதுயர்-பெருந் துன்பம்; எண்ணல் தேற்றலர் - ஆலோசித்து அறிய மாட்டாதவ ராய்; அயினிநீர் - பலவகை மலர்களோடு கூடிய ஆலத்தி நீர். (அயினி - செஞ் சோறு.)]

அருகில் நின்(று) அசைக்கின்ற ஆல வட்டக்கால்
எரியினை மிகுத்திட, இழையும் மாலையும்
கரிகுவத் தீகுவ, கனல்வ காட்டலால்
உருகுபொற் பாவையும் ஒத்துத் தோன்றினாள்.

[ஆலவட்டம் - பெரு விசிறி; கால் - காற்று;]

தீ எரிந்து கொண்டிருக்கும் போது விசிறினால் எப்படி யிருக்கும்? அதைப் போலத்தான், தோழிமார் விசுறு கின்றதினால் ஏற்பட்ட காற்றானது தீயை அதிகப்படுத் திற்று. ஆபரணங்களும் மலர் மாலைகளும் தீய்ந்து விட்டன. சீதையோ, உருகிக் கொண்டிருக்கிற பொன்னா லான பதுமைபோன்றிருந்தாள்.

---

## 14. கண்வழி நுழையும் கள்வன்!

சுர வேகத்தில் அடிக்கிறது காதல். தன்னை மறந்து சூழ் நிலையையும் அறியாது பிதற்ற ஆரம்பிக்கிறாள். "இரு ளாலே உண்டாக்கப்பட்டதொரு காடு. அதிலே மலர் சூடிவிட்டால் எப்படியிருக்கும். அதைப் போன்றது அவன் தலைமுடி" என்கிறாள். "அவனுடைய தோள்கள் மலை போருந்திய தூண்களாயிருக்கவேண்டும், அப்படி

யில்லாவிட்டால் மரகத மலையாகத்தானிருக்கவேண்டும்." என்று யூகிக்கிருள்! "கண்கள் செந்தாமரை மலர்கள்" என்று சொல்லிக்கொள்கிருள். காதலனின் உருவத்தைத் தான் எப்படியெல்லாம் உருவகப்படுத்திப் பார்த்து மகிழ் கிருள்! "வானவில், ஆமாம், இந்திரவில், அதனுடன் இறங்கிவிட்ட மேகமே அவன்" என்று முடிவுக்கு வந்து விடுகிருள்!

**அல்லினை வகுத்ததோர் அலங்கற் காடெனும்**
**வல்எழு அல்லவேல், மரக தப்பெருங்**
**கல்லெனும் இருபுயம்; கமலம் கண்எனும்**
**வில்லொடும் இழிந்ததோர் மேகம் என்னுமால்**

[அல் - இருள்; அலங்கல் - பூமாலை; வல் - வலிமையான; எழு - இரும்புத் தூண்கள்.]

"வந்து போனவன், என் இதயத்துக்குள்ளே ! நெருக் கிப் புகுந்துவிட்டான். என்னுடைய மன உறுதியையும் பெண்மையையும் உருக்கிவிட்டான். அடடா! அப்படி உருக்கியவன் அவற்ருேடு என் உயிரையுமல்லவா கவர்ந்து கொண்டு போய்விட்டான். ஆஹா, அவனுடைய தோளைத் தழுவிக்கொள்ள அந்த வில்தான் என்ன பாக்கியம் செய் தது! ஆமாம், அந்த வில், ........"

யோசிக்கிருள், இவ்வாறு நெருக்கிப்புகுந்து உருக்கிக் கொண்டு போனவன் மன்மதனே என்று எண்ணுகிருள். அவளே தன் சந்தேகத்திற்கு விடை காண்கிருள். "அது கரும்புவில் அல்லவே. ஆதலால், அவன் காமனல்ல." என்று தீர்மானித்து விடுகிருள்.

சீதையின் இதயத்தை உருக்கியது இராமனின் அழகு! நம்மையுருக்குகிறது கம்பனின் கவிச்சித்திரம்!

**நெருக்கிஉட் புகுந்(து),அரு நிறையும் பெண்மையும்**
**உருக்கி,என் உயிரொடும் உண்டு போனவன்**
**பொருப்(பு)உறழ் தோள்புணர் புண்ணி யத்தனு**
**கருப்புவில் அன்(று)அவன் காமன் அல்லனே!**

[பொருப்பு உறழ் - மலையைவிடப் பெரிய; கருப்புவில் - கரும்புவில்.]

பெண்மையின் நளினம், பெண்ணேடேயே பிறந்து விட்ட நாணம், அறிவு - அதாவது உணர்ச்சி இவை எங் கேயோ போய்விட்டன. இவை இருக்கின்றனவா என்று அவளும் கூடத் தேடிப் பார்த்தாளாம். காணவில்லை. வந்து போனனே அந்தக் கண்வழி நுழையும் கள்வன் தான் இவற்றைக்கொண்டு சென்றிருக்கவேண்டும் என்று கண்டுபிடித்துவிட்டாள். தன் இதய மலரில் கூட நடக் காமல் உல்லாசமாக வீற்றிருக்கவேண்டிய அவன் அடி வருந்த மண்ணில் நடந்து போனனே அதை எண்ணி உருகு கிருள். கள்வன் மீது இரக்கமா? காதற் கள்வனல்லவா?

**பெண்வழி நலனெடும், பிறந்த நாணெடும்,**
**எண்வழி உணர்வும், நான் எங்குங் காண்கிலேன்**
**மண்வழி நடந்(து) அடி வருந்தப் போனவன்,**
**கண்வழி நுழையும்ஓர் கள்வ னேகொலாம்?**

[பெண்வழி - பெண்ணுக்கு இயல்பாயுள்ள ; நாண் - நாணம்; எண்வழி - எண்ணத்தின் வழி செல்லும் அறிவு.]

"என்னுடைய உயிரைக் கவர்ந்து சென்றது எது?" என்று யோசிக்கிருள். "நீலமணி போன்ற மயிர் முடி, சந்திரனைப் போன்ற திருமுகம், நீண்ட கைகள், அழகான நீல மணி மலைபோன்ற தோள்கள், இவை ஒவ் வொன்றுமே என் உயிரைக் கவரக் கூடியவைகள் தான், ஆனல் இவற்றிற்கெல்லாம் முந்திக்கொண்டு என் உயிரை உண்டது அந்தப் புன்முறுவல்தான்". இவளை அப்படியே சாப்பிட்டுவிட்டதாம் புன்முறுவல், சொக்கிப் போன ளல்லவா?

**"இந்திர நீலம்ஒத்(து) இருண்ட குஞ்சியும்**
**சந்திர வதனமும், தாழ்ந்த கைகளும்,**
**சுந்தர மணிவரைத் தோளு மேயல:**
**முந்தியென் உயிரையம் முறுவல் உண்டதே!"**

[குஞ்சி - தலை முடி ; மணிவரை - நீல ரத்தினமலை.]

"என் உள்ளத்திலே உறைந்து கிடப்பது என்ன? விசாலமாய் ஒளிபரப்பிக் காண்பார் உயிரைப் பருகும் அவனுடைய மார்பா? பெருமைமிக்க செந்தாமரையைப் போன்ற பாதங்களா? இல்லை, மதம் நிறைந்து மகிழ்ச்சி

யிலே திளைத்த ஆண் யானையைப் போன்று கம்பீரமாக நடந்து சென்முனே அந்த நடையழகு என் மனத்தைப் பற்றிக்கொண்டது"

**படர்ந்(து)ஒளி பரந்(து)உயிர் பருகும் ஆகமும்,**
**தடம்தரு தாமரைத் தாளு மேயல;**
**கடம்தரு மாமதக் களிநல் யானைபோல்**
**நடந்தது கிடந்த(து)என் உள்ளம் நண்ணியே!**

[ஆகம் - மார்பு; தடந்தரு - பெருமை பொருந்திய; தாள் - பாதம்; கடந்தரு - கன்னம் சுரக்கின்ற; மா - மிக்க]

காதல் வெப்பத்தில்கூட அவளுக்கு அவசியமான தொரு சந்தேகம் தோன்றுகிறது. "கட்டழகன் மீது காதல் கொண்டுவிட்டோமே, அவனை நாம் அடைய முடியுமா?" யோசித்துப்பார்க்கவேண்டிய அவசியமான விஷயமல்லவா இது? "யோசித்துப் பார்த்தால் அவன் தேவலோகத்திலுள்ளவனல்ல. ஆமாம், தாமரை போன்ற கண்கள் இமைக்கின்றனவல்லவா? பெரிய வில்லை வைத்திருக்கிருன், மார்பில் நூலும் அணிந்திருக்கிருன், ஆகையினுல் அவன் ஒரு இளவரசனுகத்தான் இருக்கவேண்டும்"

"என்னுடன் பிறந்த பெண்மைக் குணங்கள், மன உறுதி ஆகிய கட்டமைந்த யந்திரங்கள் சுழன்று காவல் புரியும் இக்கன்னி மிதிலை யழித்துச்சென்று விட்டான் அக்குமரன், அவனை ஒரே ஒருமுறை கண்ணுல் கண்டு உயிர்விட முடியுமா?" அவனை ஒருமுறை பார்ப்பதற்காக உயிரைக்கூடத் தரத்தக்க நிலையை யடைந்து விட்டாள். காதல் தன் முழுவேகத்தையும் காட்டுகிறது போலும்!

கன்னி மதிலைக் காக்கும் யந்திரங்களென்று பெண்மையையும் நிறையையும் கூறியிருப்பது எவ்வளவு அழகாயிருக்கிறது!

**பிறந்(து)உடை நலம்நிறை பிணித்த எந்திரம்,**
**கறங்குபு திரியும்என் கன்னி மாமதில்.**
**எறிந்தஅக் குமரனை இன்னுங் கண்ணிற்கண்(டு)**
**அறிந்துஉயிர் இழக்கவும் ஆகுமோ கொலாம்!**

[பிறந்துடை - கூடவே பிறந்து; பிணிந்த - கட்டமைந்த; கறங்குபு - திரிகின்ற.]

இப்படி யெல்லாம் அவள் பிதற்றிக்கொண் டிருக்கும் பொழுதே, மனத்திலே பதிந்துவிட்ட காதலனின் உருவம் உருவெளிப்பாட்டில் எதிரே நின்கிறது. "இதோ, இதோ, இவன்தான்" என்ருள். உருவம் மறைந்துவிட்டது, "ஐயோ மறைந்தனனே" என்ருள். இவ்வாறு வெதும்பின மனத்திலே கொந்தளித்துக் குமுறும் காம வேட்கையால் ஒன்றல்ல பல நினைந்து உருகுகிருள்.

என்றிவை யினையன விளம்பும் எல்வையில்
நின்றனன் இவன்எனும், நீங்கி ஞன்எனும்;
கன்றிய மனத்துறு காம வேட்கையால்
ஒன்றல பலநினைந்து உருகுங் காலையே.

[இனையன - இவை போன்ற; விளம்பும் எல்வையில் - கூறுகின்ற பொழுதில்.]

இந்தச் சந்தர்ப்பத்திலே "கதிரவன் கடலின் மூழ்கிஞன்." இதற்குக் காரணம் கற்பிக்கிருன் கவி. அன்னம் போன்ற நடையளான சீதைக்கு ஏற்பட்ட காமத்தீ தன்னைச் சுடுவதைப் பொறுக்க மாட்டாதவஞய் மேற்கடலில் மூழ்கினஞம்.

கதிரவன் மறையவும் மாலை வந்துவிட்டது. சீதைக்கு, அந்தி மாலை எப்படி யெல்லாம் தோன்றுகிறது பாருங்கள்:

விரிமலர்த் தென்றலாம் வீசு பாசமும்
எரிநிறச் செக்கரும் இருளுங் காட்டலால்
அரியவட்(கு) அனல்தரும் அந்தி மாலையாம்
கருநிறச் செம்மயிர்க் காலன் தோன்றிஞன்.

[விரி - மலர்ந்த; செக்கர் - செவ்வானம்.]

அந்திமாலை யமஞகத் தோன்றுகிறது அவளுக்கு. தென்றலைக் காலபாசமாகக் கருதுகிருள். வானத்திலே காணப்படும் செந்நிறத்தையும் கருமையையும், காலனது செம்மயிராகவும், கருநிறமாகவும் காண்கிருள். இனிமையைத் தரவேண்டிய அந்திமாலை, எவ்வளவு கொடியதாகிவிட்டது காதலிக்கு. மாலையில் வீசும் மந்த மாருதத்

தென்றற்காற்று அவள் மீது உராயும் போதெல்லாம் யமனது பாசக் கயிறு தொட்டிழுப்பது போன்றிருக் கிறது போலும்!

மாலையை நோக்கி அவளே கேட்டுவிடுகிருள்.

கயங்கள் என்னுங் கனல் தோய்ந்து
கடிநாண் மலரின் விடம்பூசி
இயங்கு தென்றல், மன்மதவேள்
எய்த புண்ணின் இடைநுழைய
உயங்கும் உணர்வும் நன்னலமும்
உருகிச் சோர்வாள் உயிருண்ண
வயங்கு மாலை வானேக்கி
'இதுவோ கூற்றின் வடி' வென்ருள்.

[கயங்கள் - குளங்கள்; கனல் - நெருப்பு; கடி - புதிய; நாள் மலர் - அன்றலர்ந்த மலர்; இயங்கு - சஞ்சரிக்கின்ற; உயங்கு - வருந்துகிற; வயங்கு - விளங்குகிற; கூற்று - யமன்]

தென்றற் காற்று, குளங்கள் என்கிற நெருப்பிலே படிந்து, பிறகு அன்றலர்ந்த மலர்களிலிருந்து மகரந்த மென்னும் விடத்தைப் பூசிக்கொண்டு, மன்மதனுடைய அம்புகள் உண்டாகின புண்களிலே நுழைகிறதாம். அறிவு அழிந்து, பெண்மைக்குணம் தளர்ந்து மெய் சோர்ந்த சீதை உயிரை உண்ணவரும் மாலைக் காற்ருேடு கூடிய வானத்தைப் பார்த்து, இதுதானே யமனின் பயங்கர உருவம் என்கிருள்.

அவள் காமவேதனை எதை யெதை எப்படி யெல்லாம் உருவகப்படுத்தச் சொல்கிறது!

இருள்-கொடிய கரு நிறம். நட்சத்திரங்கள் - விஷப் பற்கள், வாடை - மூச்சுக் காற்று, செவ்வானம் - விஷப் பையையுடைய வாய், இப்படியாக அந்திமாலை பெரிய படத்துடன் கூடிய நாகமாகக் காட்சியளிக்கிறது அவளுக்கு. "நாவினல் என்னை வளைத்து ஏன் வருத் துகிருய்?" என்கிருள். "என் மீது காமன் அம்புகளை எய்து கொண்டேயிருக்கிருன். கை ஓய்ந்தபாடில்லை. எனக்கு உயிரும் ஒன்றுதான்! அவனுக்குத் தப்பிப்

பிழைத்தாலும் நீ விட மாட்டாய் போலிருக்கிறதே. உனக்கும் எனக்கும் பகையில்லையே, பெண் பழியை ஏற்றுக் கொள்ள ஏன் விரும்புகிறாய்?"

ஆஹா! எவ்வளவு பரிதாபமாகப் பேசுகிறாள் மாலையுடன்.

மாலை போய் இருள் வந்து விட்டது. புலம்புகிறாள்.

***ஆலம் உலகிற் பரந்ததுவோ? ஆழி கிளர்ந்ததோ? அவர்தம்***
***நீல நிறத்தை எல்லோரும் நினைக்க அதுவாய் நிரம்பியதோ?***
***காலன் நிறத்தை அஞ்சனத்திற் கலந்து குழைத்துக் காயத்தின்***
***மேலும் நிலத்தும் மெழுகியதோ? விளைக்கும் இருளாய்***
***விளைந்ததுவே***

[ஆலம் - விஷம்; ஆழி - கடல், இங்கே கருங்கடல்; கிளர்ந்ததோ - பொங்கி விட்டதோ; அஞ்சனம் - மை; காயம் - வானம்.]

எங்கே பார்த்தாலும் நீலங்கவிந்த இருட்டாகிவிட்டது. இதற்குக் காதலி காரணங் கண்டு பிடிக்கிறாள்!

"ஆலகால விஷம் உலகெங்கும் பரந்து விட்டதோ? கருங்கடல் பொங்கி மேலே வந்து எங்கும் பரவி விட்டதோ? அல்லது அவருடைய நீல நிறத்தை என்னைப் போல் எல்லாரும் நினைக்க அந்த நீலநிறமே எங்கும் பரவி விட்டதோ? யமனுடைய கரிய நிறத்தை கண் மையுடன் கலந்து குழைத்து பூமியிலும் ஆகாயத்திலும் பூசி யிருக்கிறார்களோ?"

தன் சிந்தையில் நின்றுவிட்ட பொருள் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பதாகத் தென்படுவதுதான் இயற்கை. தான் விரும்பும் பொருளைச் சிந்தித்துச் சிந்தித்து பார்ப்பவைக ளெல்லாம் அம்மாதிரியே தென்படும். அவளுக்கு யாரைப் பார்த்தாலும், எதைப் பார்த்தாலும் விற்பிடித்த நீலமேகனைத் தோன்றுகிறது. இப்படி எல்லாருமே நினைத்ததால்தான் உலகமே நீலமாகிவிட்டதோ என்கிறாள். தன் மனோ நிலையில் வைத்தே மற்றவர்களையும் அளந்து பார்க்கிறாள்.

அப்பொழுதே! பயங்கர மௌனத்தைக் கிழித்துக் கொண்டு ஒரு * அன்றிற் பறவையின் கூக்குரல் கேட்கிறது. காமநோய் அதிகப்படுகிறது இவளுக்கு.

என் கண்முன்னே சிறிதுநின்றவரோ போய்விட்டார்.

இத் துன்பத்தினின்றும் விடுவிப்பதற்கு ஒருவரையும் காணேன். நான் எளியள். பெண் என்றும் பாராமல் இராக் காலத்திலே மறைந்திருந்து அம்பு விடுகிறாரே மன்மதனார், அவர்தான் இந்த மாயத்தை உனக்குச் சொல்லித் தந்தாரா? இல்லை, நான் செய்த தீவினைதான் அன்றிற்பறவையாக உருக்கொண்டு வந்திருக்கிறாயோ?

வெளி நின்றவரோ போய் மறைந்தார் என்று சொல்லும் போது நம் இதயம் அப்படியே உருகிவிடுகிறது. கல் மனத்தையும் கலங்க வைக்கும் கவி இது.

வெளிநின் றவரோ போய்மறைந்தார்;
விலக்க ஒருவர் தமைக்காணேன்!
எளியள் பெண்ணென்று இரங்காதே,
எல்லி யாமத்(து) இருளூடே
ஒளிஅம்(பு) எய்யும் மன்மதனார்
உனக்(கு)இம் மாயம் உரைத்தாரோ?
அளியென் செய்த தீவினையே
அன்றி லாகி வந்தாயோ?

[எல்லியாமம் - இராக்காலத்து; ஒளி - மறைந்து.]

இப்படி அவஸ்தைப் படுகிற தலைவியைக் கண்டனர் தோழிமார். வழக்கம்போன்று நெய்விளக்கேற்றவில்லை அவர்கள். விளக்கின் வெப்பத்தை அவளால் எப்படித் தாங்க முடியும்? தூண்டா விளக்கான இரத்தின தீபங்களால் இரவைப் பகலாக்கினார்களாம்.

ஆண்(டு)அங்(கு) அனையாள் இனையநினைந்(து)
அழுங்கும் எல்வை அகல்வானம்
தீண்ட நிமிர்ந்த பெருங்கோயிற்
சீத மணியின் வேதிகைவாய்

---

* அன்றிற் பறவை - இந்த ஜாதிப் பறவைகள் ஆணும் பெண்ணுமாகக் கூடியே வாழும். ஒன்றையொன்றைப் பிரிந்தாலும் பிரிவாற்றாமையினால் கத்திக் கத்தி இறந்துபோகும். இதைக் குருகு என்றும் சொல்வார்கள்.

நீண்ட சோதி நெய்விளக்கம்
வெய்ய என்(று)அங்(கு) அவை நீக்கித்
தூண்டல் செய்யா மணிவிளக்கின்
சுடரால் இரவைப் பகல்செய்தார்.

[ஆண்டு - அவ்விடத்தில்; அங்கு - அவ்வாறு; அனையாள் - பிராட்டி;[1] அழுங்கும் எல்லை - வருந்தும் பொழுது; கோயில் - கன்னிமாடம்; அகல்வானம் தீண்ட நிமிர்ந்த பெருங்கோயில் - மேலுலகத்தையும் தொடும்படி உயர்ந்த கன்னியாமாடம்; சீத மணியின்வேதிகை வாய் - குளிர்ந்த சந்திரகாந்தக் கல்லினால் செய்யப்பட்ட மேடையில்; வெய்ய - வெப்பமான:]

இதே சமயம், கடலைக் கடைந்தபோது தோன்றிய அமுதம் நிறைந்த பொற்கலசம் போல சந்திரன் உதித்தான். கருங்கடல் ஒரு வெண் தாமரையை உண்டாக்கினது போலிருந்ததாம் வெண் திங்களின் தோற்றம்.

உலகை வளைத்துவிட கைபரப்பிய இருளை அப்படியே உண்டுவிட எழுந்த நிலா எப்படிப் பரவுகிறது என்று பாருங்கள்:

வண்ண மாலைக் கைபரப்பி
உலகை வளைந்த இருளெல்லாம்
உண்ண எண்ணித் தண்மதியத்(து)
உதயத்(து) எழுந்த நிலாக்கற்றை
விண்ணும் மண்ணும் திசையனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநன்னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன்
* புகழ்போல் எங்கும் பரந்துளதால்.

[வண்ணம் - (செந்) நிறமுள்ள; தண்மதியத்து உதயத்து எழுந்த - குளிர்ந்த சந்திரனிலிருந்து வெளிபபட்ட,]

விண்ணையும் மண்ணையும் திசையனைத்தையும் விழுங்கிவிட்டதாம் சடையப்பன் புகழ். அதைப்போல எங்கும் பரவிற்றும் நிலாக்கற்றையின் ஒளி, வள்ளலை எப்படியெல்லாம் புகழ்ந்து புகழ்ந்து ஆனந்தப்படுகிறுன் கவிஞன்.

* புகழை வெண்ணிறமாக வருணிப்பது கவிமரபு.

சந்திர உதயத்தை கவியுள்ளங் கொண்டவனைத் தவிர வேறு யாரால் இப்படியெல்லாம் கண்டு மகிழ முடியும்?

சந்திரன் வந்ததும் தாமரை சாம்பிக் குவிந்துவிட்டது. ஆம்பல் மலர்ந்துவிட்டது. இது, உலகத்தை ஆண்ட சக்கரவர்த்தி ஒடுங்கினதும் குறு நில மன்னன் தலை தூக்கியதைப் போலிருந்ததாம்.

சீதைக்கு இருளும் நெருப்பாய்த்தான் தோன்றுகிறது. சந்திரனும் நெருப்பாய்த்தான் தோன்றுகிறான். வித்தியாசம் அது கரு நெருப்பு, இது வெண்ணெருப்பு என்பதுதான். உலக முழுவதையும் விழுங்கவந்து மேலும் மேலும் விருத்தியடைகிற இருளினூடே தோன்றிய வெண்ணெருப்பாம் சந்திரன்! சந்திரனைப் பார்த்ததும் கடல் கொந்தளிக்கிறது. நீலமேகனான இராமனின் நிறத்திற்குத் தோற்றுப்போய்த்தான் அவ்வாறு ஒதுங்கிக் குலுங்கி விம்முகிறதாம் கடல்! "ஏங்கிக் கிடக்கும் கடலுக்கும் எனக்கும் கொடியவனாகி விட்டாயே?" என்று வெண்ணெருப்பைப் பார்த்துக் கேட்கிறாள். "கரு நெருப்பினிடையே எழுந்த வெண்ணெருப்பே!" இதயத்தின் அடியிலிருந்து கிளம்பிய இந்த நிந்தனை சொற்சித்திரம் எவ்வளவு நயமானது.

நீங்கா மாயை அவர்தமக்கு
    நிறமே தோற்றுப் புறமேபோய்
ஏங்காக் கிடக்கும் எறிகடற்கும்,
    எனக்கும் கொடியை ஆனாயே,
ஓங்கா நின்ற இருளாய்வந்(து)
    உலகை விழுங்கி மென்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பின்
    இடையே எழுந்த வெண்ணெருப்பே!

[நீங்காமாயை - கண்ணிற்பட்டுப் பின் மறைந்திருந்து வருத்துவது; ஓங்கா நின்ற - அதிகப்படுகிற; வீங்கா நின்ற - மென்மேலும் விருத்தியடைகிற.]

சந்திரன் இயற்கையில் குற்றமற்றவன், கடலினின்று தோன்றியதால் குளிர்ச்சி மிக்கவன், அமுதத்தோடு பிறந்தவனானதால் நல்லவன். பெண்ணாகிய இலக்குமி

யுடன் உதித்தவனுதலால் இரக்கமுள்ளவன். "இப்படிப் பட்ட என்னை நீ சுடுவாயோ?" என்கிருள். அவனைப் புகழ்ந்துபேசி "எனக்குத் தீங்கு செய்யாதே" என்று வேண்டுகிருள் போலும்!

கொடியை யல்லை நீ, யாரையும் கொல்கிலாய்
வடுவில் இன்னமு தத்தோடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணெடுஎன் ருல்எனைச்
சுடுதி யோகடற் ருேன்றிய திங்களே.

[கொடியை - கொடியவன்; அல்லை, - அல்ல; கொல்கிலாய் - கொல்வதில்லை; வடுவில் - குற்றமற்ற; பிடியின் மென்னடை - பெண் யானையின் மென்மையான நடை.]

கடலில் தோன்றிய நிலா மேலோங்கி வருகிறது. நிலாக்கதிர் எங்கும் நிமிர்ந்து நீக்கமின்றி வீசுகிறது. நிலாக்கற்றையின் மோதுதலால் சீதை வெதும்பி தளர்ந்தாள். கீழே சாய்ந்துவிட்டாள். அவளுக்குப் படுக்கையாகிக் கிடந்த செந்தாமரை இதழ்கள் தீந்தன. அப்படியே ஆனுள் பூவையும்.

நீக்கம் இன்றி நிமிர்ந்த நிலாக்கதிர்
தாக்க வெந்து தளர்ந்து சரிந்தனள்,
சேக்கை யாகி மலர்ந்த செந்தாமரைப்
பூக்கள் பட்டதப் பூவையும் பட்டனள்.

[நீக்கமின்றி - நீங்குதலில்லாமல்; நிமிர்ந்த - பரவிய; சேக்கை - படுக்கை; பட்டன - தீய்ந்தன.]

நோய் இன்னதென்றறியாது திகைக்கின்றனர் தோழிகள். நோய் இன்னதென்று தெரிந்துதான் என்ன பயன்? ஆசை நோய்க்கு மருந்துமுண்டோ? ஆனுலும் தோழிகள் செய்யவேண்டியதைச் செய்துதானே யாக வேண்டும்?

வாச மென்கல வைக்களி வாரிமேற்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்;
வீச வீச வெதும்பினள் மென்முலை,
ஆசை நோய்க்கு மருந்துமுண் டாங்கொலோ?

[கல்வைக்களி - கலவைச் சந்தனக் குழம்பு; புலர்ந்து - வெதும்பி.]

சந்தனத்தைப் பூசினார்கள், புலர்ந்தாள், வீசினார்கள்; வெதும்பினாள். நோய் என்ன சாமானியப்பட்டதா?

---

## 15. பொருளெல்லாம் அவள் பொன்னுரு வாயவே!

விசுவாமித்திரரையும் அரசிளங் குமரர்களையும் சனக ராஜன் வரவேற்று பெரிய மாளிகையிலே தங்கியிருக்கச் செய்தார். விசுவாமித்திரர் வருகையறிந்து வந்து சேர்ந்தார் அகலிகை புத்திரர் சதாநந்தர். இராமனை வாழ்த்தினார். விசுவாமித்திரர் சொல்லுகிறார்.

'வடித்த மாதவ! கேட்டி! இவ் வள்ளல்தான்
இடித்த வெங்குரல் தாடகை யாக்கையும்,
அடுத்தென் வேள்வியும் நின்அன்னை சாபமும்,
முடித்(து)என் நெஞ்சத்(து) இடர்முடித் தான்என்றான்.

[வடித்த மாதவ - தெளிந்த பெரிய தவத்தைச் செய்த; யாக்கை - உடம்பு.]

எதிரிலிருப்பவரை மதிப்பாகக் கூப்பிட்டு, இவன் வள்ளல் என்பதையும் அவன் முடித்த மூன்று பெரிய காரியங்களையும் ஒரே கவியில் எவ்வளவு அழகாகக் கூறி விட்டார்.

என் நெஞ்சத்து இடர்முடித்தான் என்று சொல்லி, அவன் முடித்தவற்றிற்கெல்லாம் சிகரமாகவும், அவன் புகழுக்கு எல்லையாகவும் கூறுகிறார்.

"உமது அருள் இருக்கையில் இவை அரிய காரியமா?" என்று முகமன் கூறுகிறார் சதானந்தர். பின்னர் விசுவாமித்திரனது சரித்திரத்தை இராம இலக்குவர்கட்கு எடுத்துரைக்கிறார்.

சதானந்தர் விடைபெற்றுக்கொண்டு சென்றபின் அவரவர் தம் தம் படுக்கைக்குச் சென்றனர். தனியே விடப்பட்ட இராமன் எப்படி இருக்கிறான் என்று பார்ப்போம்.

முனியும் தம்பியும் போய்முறை யால்தமக்(கு)
இனிய பள்ளிகள் எய்தினர் பின்,இருட்
கனியும் போல்பவன் கங்குலும் திங்களும்
தனியும் தானும்அத் தையலும் ஆயினான்.

[பள்ளி - படுக்கை; எய்தினர் - அடைந்தனர்; கங்குல் - இரவு; தையல் - பெண் (சீதை.)]

அவர்கள் போய்ப் படுத்துக்கொண்டார்கள். அவர்களுக் கென்ன கவலை! இருள்மயமானதொரு பழத்தைப் போன்ற இராமன் தனியாக இல்லையாம்! இருட்டு, சந்திரன், தனிமை, தான், உருவெளித் தோற்றத்திலே தோன்றிய சீதை இவ்வளவு பேருடன் இருக்கிறான்!

இராமனை வில்லொடு இழிந்த மேகம் என்று கருதினாள் சீதை. இராமன், வானத்திலிருந்து வந்த மின்னல் கிறான் சீதையை.

விண்ணின் நீங்கிய மின்னுரு இம்முறை,
பெண்ணின் நன்னலம் பெற்றதுண் டோகொலோ?
எண்ணின் ஈது அலது என்றறி யேன்இரு
கண்ணின் உள்ளுங் கருத்தினுங் காண்பனால்.

[விண் - மேகம்; ஈது அலது என்றறியேன் - இத்தன்மையதென்றும், இத்தன்மையல்லாததென்றும் அறிகிலேன்.]

உள்ளத்திலே தோன்றிய உருவெளியான சீதையை இப்பொழுது புறத்திலும் காண்கிறான். "மின்னல் பெண்ணின் அழகெல்லாம் ஒருங்கு சேர்ந்து இவ்வாறு உருக்கொள்வதும் உண்டோ? எப்படி யென்பதை யறிய முடியவில்லையே!" என்று ஏங்குகிறான்.

இவனை அந்திமாலையும், இருட்டும் வாதை செய்யாதபடி, முனியும் தம்பியும் இருந்து காப்பாற்றிவிட்டார்கள். இவ்வளவு நேரம் அடக்கி வைத்துக்கொண்டிருந்த எண்ண அலைகள் இப்பொழுது மோத ஆரம்பிக்கின்றன.

தன்னைப் பார்த்த மாத்திரத்திலே ஓடிவந்து அணைத்துக் கொள்ளவில்லை யாதலால் அவள் கருணையற்றவள் என்கிருன். "காமநோயைத் தருகிற விஷம்போன்ற கண்களால் என்னை விழுங்கிவிட்டாளே" என்று துடிக்கிருன். இராமனின் நீல நிறமே எங்கும் பரந்ததாகத் தோன்றிற் றல்லவா சீதைக்கு. காண்கின்ற பொருள்களெல்லாம் சீதையின் பொன்னுருவாகவே தெரிகின்றன இராமனுக்கு!

அருளி லாள் எனி னும்மனத்(து) ஆசையால்
வெருளும் நோய் விடக்கண்ணின் விழுங்கலால்
தெருளி லாஉல கிற்சென்று நின்றுவாழ்
பொருளெ லாம்அவள் பொன்னுரு வாயவே!

[வெருளும் - அஞ்சுதற்குக் காரணமான; தெருளிலா - தெளிவில்லாத; சென்று நின்று வாழ் - சரமாயும் அசரமாயும் வாழ்கிற.]

"பொருளெல்லாம் அவள் பொன்னுரு வாயவே" "அவர் தம் நீல நிறத்தை எல்லோரும் நினைக்க அதுவாய் நிரம்பியதோ?" இரண்டையும் மாறி மாறிப் படித்து இன்பம் அனுபவிக்க வேண்டும். வேகம் அதிகரிக்கிறது. இன்னும் என்ன எண்ணுகிருன் பாருங்கள்:

வாள்நி லாமுறு வல்கனி வாய்மதி
காண லாவதோர் காலமுண் டாங்கொலோ?

[வாள் - ஒளி பொருந்திய; முறுவல் - புன் சிரிப்பு; கனி வாய் - கொவ்வைப்பழம் போன்ற அதரம்]

அவள் என்னைத் தழுவாவிட்டாலும் போகட்டும். ஒருமுறை காணவாவது முடியுமா? சீதையை மயக்கியது இராமனின் புன் சிரிப்புத்தானே? இராமன் இதயத்தைக் கொள்ளைகொண்டதும் அதுவேபோலும்!

"காமன் அம்புகளால் என்னைக் கொல்கிருனே! வெற்றியொன்றையே கண்டு வருகின்ற என்னை, மென்மை வில்லுடைய காமன் வருத்தினுல் வலிமை யென்பதுதான் வேறு யாரிடம் இருக்கிறது?" என்று இரங்குகிருன்.

இவ்வாறு எண்ணிய அவன் நிலாவைப் பார்த்துவிட்டான். "விஷம் கருப்பாகத்தான் இருக்குமென்பார்கள்; வெண்மையான விஷமும் உண்டோ?" என்று சந்தேகப்படுகிறான்!

உலகத்தையே கொள்ளையிட்டு விடுவேனென்று கொதித்து எழுகிறதாம் நிலா. திருப்பாற் கடல் நீர்போல எங்கும் பரவுகிறதாம். சீதையை நினைக்குந் தோறும் அவன் உயிரைத் துருவுகிறதாம்.

> கொள்ளை கொள்ளக் கொதித்தெழு பாற்கடல்
> பள்ள வெள்ளம் எனப்பட ரும்நிலா
> உள்ள உள்ள உயிரைத் துருவிட
> வெள்ளை வண்ண விடமும்உண் டாங்கொலோ?

[பள்ள - (பாற்கடலின்) ஆழம்; உள்ள உள்ள - நினைக்க நினைக்க; துருவிட - துளைக்க; வண்ணம் - (வர்ணம்) நிறம்.]

"ஆமாம், அந்தப் பெண்ணைப் பார்த்ததும் காதல் கொண்டுவிட்டோமே, சரியா? மனம் சரியான வழியிலே தான் சென்றிருக்கிறா?" என்றெல்லாம் சிந்தித்து முடிவுக்கு வருகிறான்.

> "ஆகும் நல்வழி; அல்வழி என்மனம்
> ஆகுமோ அதற்(கு) ஆகிய காரணம்,
> பாகு போல்மொழிப் பைந்தொடி கன்னியே
> யாகும்: வே(று)இதற்(கு) ஐயற வில்லையே!

[ஆகும் நல்வழி அல்வழி - செல்வதற்குத் தகுதியில்லாத தீய வழியில்; என் மனம் ஆகுமோ - என்மனம் செல்லுமா?; பைந்தொடி - பசும் பொன்னாலான வளையணிந்த சீதை; ஐயுறவு - சந்தேகம்.]

"தன் சிந்தை அவளிடம் சென்றதால் அவள் கன்னியாகவே இருக்க வேண்டும்." இதற்குத் தன் மனத்தையே சாட்சியாகக் கொண்டுவிடுகிறான். இராமனின் மாசிலா உள்ளத்தைக் கம்பன் எத்துணை சாதுரியமாக வெளியிடுகிறான்.

சந்திரன் மறைந்தான்; இரவும் கழிந்தது. இரவு என்கிற அரசனது ஒற்றை வெண்கொற்றக் குடை விழுந்த

தாம். மேற்குத் திசையாளின் நெற்றியிலே தொங்கிய சுட்டி மறைந்ததாம்.

கழிந்த கங்குல் அரசன் கதிர்க்குடை
விழுந்த(து) என்னவும், மேற்றிசை யாள்சுடர்க்
கொழுந்து சேர்நுதற் கோதறு சுட்டிபோய்
அழிந்த(து) என்னவும் ஆழ்ந்தது திங்களே.

[சுடர் கொழுந்து சேர் - இளமையான ஒளி பொருந்திய; கோதறு - குற்றமற்ற; சுட்டி - நெற்றியில் அணியும் ஆபரணம் (வட்டவடிவமானது); ஆழ்ந்தது - அழிந்தது.]

நிலா மறைந்ததானது, சந்திரனின் திக்குகள் என்கிற ஆசை மாதர்கள் கணவனைப் பிரிந்த சோகத்தால் வெண் கலவைச் சந்தனத்தை அழித்தது போலுமாம்!

வீசுகின்ற நிலாச்சுடர் வீந்ததால்;
ஈச னும்மதி ஏகலும், சோகத்தால்
பூசு வெண்கல வைப்புனை சாந்தினை
ஆசை மாதர் அழித்தனர் என்னவே!

[வீந்ததால் - மறைந்ததால்; ஈசன் ஆம் - தத்தமக்குக் கணவனாகிய.]

சூரியோதய மாகிறது. மேற்கே இருட்டில் மறைந்த சூரியன் இருட்பிழம்பி லிருந்தே கம்பீரமாகக் கிளம்புகிறான்.

ததையும் மலர்த் தார்அண்ணல் இவ்வண்ணம்
மயலுழந்து தளரு மேல்வை,
சிதையும் மனத்(து) இடருடைய செங்கமலம்
முகமலரச் செய்ய வெய்யோன்,
புதைஇருளின் எழுகின்ற புகர்முகயா
னையின்உரிவைப் போர்வை போர்த்த
உதயகிரி எனும்கடவுள் நுதல்கழித்த
விழியேபோல் உதயஞ் செய்தான்,

[ததை - நெருங்கின; தார் - மாலை; மயலுழந்து - காம மயக்கத்தால்; செய்ய - செந்நிறமுள்ள; தளருமேல்வை - தளர்ச்சியடைகிற பொழுதில்; சிதையும் மனத் திடருடைய - நிலை குலைகின்ற நெஞ்சத்திலே சோகத்தையடைந்த; புகர் முகம் - செம்புள்ளிகளை யுடைய முகம்; உரி - தோல்]

சிவனின் " நுதல்கிழித்த விழியேபோல் " மூன்ருவது கண்ணி லிருந்து நெருப்புக்கோளமாகப் புறப்பட்டானும்.

சூரியனின் தலைவியாகிய செங்கமலம் கணவனின் வரவுகண்டு மகிழ்கிறதாம்.

*போர் புரிவதற்கோ, பொருள் தேடுவதற்கோ குறித்த காலத்தில் திரும்புவதாகச் சொல்லிச் சென்ற கணவன் திரும்பிவரக் கண்டு மகிழும் கற்புடைப் பெண்டிரைப்போல மகிழ்ந்ததாம் மலர். கார் காலத்தில், அல்லது பனிக் காலத்தில் வந்து விடுவதாகச் சொல்லிக் காதலன் செல்கிருன். குறித்த காலம்வரை உயிரைத்தான் வைத்துக் கொண்டிருப்பாள் காதலி. மெலிவினுல் வளை கழன்று விடும். மெய்யின் பளபளப்பு மங்கிவிடும். இப்படி இவர்கள் வாடிக்கிடக்கின்ற வேளையிலே காதலனின் மணித்தேரோசை கேட்டு வந்து பார்க்கின்றனர். ஆமாம், காதலனே, வெற்றிமாலைச் சூடி வந்திருக்கிருன். கண்டவுடன் களிப்பு மிகுகிறது. மெலிவு நீங்குகிருள், ஒளி பெறுகிருள். ஆனந்தம் நடம்புரிகிறது அவளுடைய முகத்திலே. இந்தக் காதல் சித்திரத்தைத்தான் தாமரையிலே ஏற்றிப் பார்க்கிருன் கவிஞன்.

பண்டுவருங் குறிபகர்ந்து பாசறையிற்,
பொருள்வயினிற் பிரிந்துபோன
வண்டுதொடர் நறுந்தெரியல் உயிரனைய
கொழுநர்வர மணித்தேரோடுங்
கண்டு,மனங் களிசிறப்ப தெளிசிறந்து
மெலிவகலும் கற்பினர்போல்
புண்டரிகம் முகமலர அகமலர்ந்து
பொலிந்தனபூம் பொய்கை யெல்லாம்.

[பண்டு - (தலைவியைப் பிரிவதற்கு) முன்னம்; பாசறையிற் பொருள் வயினிற் பிரிந்துபோன - பகைவர் மீது போர் செய்வதற்கேனும் செல்வந் தேடுவகற்கேனும்; வண்டு தொடர் - இடைவிடாத வண்டுகள் மொய்க்கிற; நறுந் தெரியல் - நல்ல மணமுள்ள மலர் மாலை; மெலிவு - தளர்ச்சி; புண்டரிகம் - தாமரைக் கொடிகள்.]

---

*கோவை நூலில் இவற்றைப் பரக்கக் காணலாம்.

சூரியன் எப்படிப் பரவுகிறது பாருங்கள்:

வேதங்கள் முழங்குகின்றன. கின்னரர்கள் இசை பாடுகின்றனர். உலகத்தவர் துதிக்கின்றனர். விண்ணவரும், முனிவர்களும் வேதியர்களும் கரங்கூப்பி வணங்குகின்றனர். கடல் மத்தளமாக முழங்குகிறது. ஆகாய நடன சபையில் நடம்புரியும் முக்கண்ணனின் பொன்னிறச் சடைகள் விரிந்து விளங்குவது போல கிரணங்கள் எங்கும் பரவினவாம்.

எண்ணரிய மறையினொடு கின்னரர்கள்
இசைபாட உலகம் ஏத்த,
விண்ணவரும் முனிவர்களும் வேதியரும்
கரங்குவிப்ப, வேலை யென்னும்
மண்ணும்மணி முழவதிர வான்அரங்கில்
நடம்புரிவாள் இரவி யான
கண்ணுதல்வா னவன்கனகச் சடைவிரிந்தா
லெனவிரிந்த கதிர்க ளெல்லாம்.

[ஏத்த - துதிக்க; வேலை - கால்; மண்ணும் மணி - மத்தளத்தில் அடிக்கும் பாகத்தைப் பதமா யமைத்தல்; கண்ணுதல் வானவன் - நெற்றியில் கண்ணுடைய உருத்திரன்; கனகம் - பொன்.]

காதலியைக் கண்டதும் அடையப் பெறாத - இரவு நீண்டு நீண்டு இருட் கடலாகி விட்டதாம்!

இராமனின் நிலைக்குக் கவி இரங்குகிறார். இவன் ஆயிரம் மாணிக்கங்களின் பிரகாசத்திலே துயில வேண்டியவன். அந்தப் பழைய கடலில் பள்ளிகொள்ளாமல் இந்தத் துயரக் கடலில் தூங்குகிறான். சக்கராயுதந் தரிக்க வேண்டியவன் வில்லும் கையுமானான். இரவெல்லாம் கண் விழித்த இராமன் காலையில் மயங்கிவிட்டானாம். சூரியன் உதித்த பிறகும் மயக்கம் தெளியவில்லை. எனவேதான், சூரியன் தன் மெல்லிய கரத்தால் அடிவருடித் தூக்கம் தெளிவித்தான். இருட் கடலைவிட் டெழுகிறான் இராமன்.

கொல்லாழி நீத்(து) அங்கோர் குனிவயிரச்
சிலைதடக்கைக் கொண்ட கொண்டல்
எல்லாழித் தேர்இரவி இளங்கரத்தால்
அடிவருடி அனந்தல் தீர்ப்ப

அல்லாழிக் கரைகண்டான் ஆயிரவாய்
மணிவிளக்கம் அழலும் சேக்கைத்
தொல்லாழித் துயிலாதே துயராழி
நெடுங்கடலுள் துயில்கின் ருனே

[கொல்லாழி - கொடியவரைக் கொல்லவல்ல சக்கராயுதம்; குனி வயிரச் சிலை - வளைந்த உறுதியான வில்; எல் - ஒளியையுடைய; அனந்தல் - நித்திரை; அல் - இருள்; அழலும் - ஜொலிக்கும்; தொல் - பழைய.]

ஊழிக்காலம், அதாவது பல கோடி ஆண்டுகள் கழிந்தது போன்றிருந்ததாம் இராமனுக்கு விடிந்துவிட்டது என்பதை யறிந்ததும். காலைக் கடன்களை முடித்துக் கொண்டு முனிவரைப் பணிந்து தம்பியுடன் சனகரின் வேள்விச்சாலையை யடைந்தான்.

ஊழிபெயர்ந் தெனக்கங்குல் ஒருவண்ணம்
புடைபெயர, உறக்கம் நீத்த,
சூழியா னையினெழுந்து தொல்நியமத்
துறைமுடித்துச் சுருதி அன்ன
வாழிமா தவற்பணிந்து மனக்கினிய
தம்பியொடும் வம்பின் மாலை
தாழுமா மணிமௌலித் தார்ச்சனகன்
பெருவேள்விச் சாலை சார்ந்தான்.

[கங்குல் - இருட்டு; ஒரு வண்ணம் - ஒரு மாதிரியாக; புடைபெயர - நீங்க; சூழியானை - தூக்கத்தை விட்டெழுந்த முகபடாத்தையுடைய யானை; தொல் நியமம் - பழைய முறை; சுருதியன்ன-வேதங்களையொத்த (முனிவர்); வம்பின் - வாசனையுடைய; தாழும் - நீண்டு தொங்குகிற (மாலை); மணி மௌலி - இரத்தின கிரீடம்.]

யாகம் முடிவுற்றது. எங்கும் மங்கள ஒலி முழங்க சனகன் மணிமண்டபத்தையடைந்தார். விசுவாமித்திரரும் இராம இலக்குவர்களும் பக்கத்திலே யமர்ந்துள்ளனர். பல முனிவர்களும் புடைசூழ்ந்துள்ளனர்.

தம் பக்கத்திலுள்ள அழகே வடிவெடுத்த அரசிளங் குமரர்களைக் கண்டார் சனகர். தம் கண்களால் அவர்களது அழகைப் பருகினர். முனிவரைப் பணிந்து "இவர்கள் யாவர்?" என்ருர்.

இருந்தகுலக் குமரர்தமை இரு
கண்ணின் முகத்(து)அழகு பருகநோக்கி
அருந்தவனை அடிவணங்கி யார்இவரை
உரைத்திடுமின் அடிகளென்ன
"விருந்தினர்கள் நின்னுடைய வேள்விகா
ணியவந்தார், வில்லுங் காண்பார்,
பெருந் தகைமைத் தயரதன்தன்
புதல்வரென அவர் தகைமை பேசலுற்றான்.

[தகைமை - பெருமை.]

குலக்குமரர் என்றார். பார்க்கும்போதே நற்குலத் துதித்தவர்கள் என்பதை யறிந்து கொண்டார்.

விசுவாமித்திரர், "இவர்கள் விருந்தினர்கள், வேள்வி காண வந்தவர்கள், அதுமட்டும் அல்ல, சீதையை மணம் முடிப்பதற்காக வைத்திருக்கிறாயே வில் அதையும் பார்ப் பார்கள்" என்று கம்பீரமாக மொழிகிறார்.

"வில்லுங் காண்பார்" என்று சொல்லுகிற ஓசை நயம் இராமனின் வீரத்தை அப்படியே எடுத்துக் காட்டு வது போலிருக்கிறது.

---

## * வெற்றித் திருமணம்

இராமனது முன்னோர்களின் பெருமையை எடுத்துக் கூறு கிறார் விசுவாமித்திர முனிவர். பின்னர், இராமனின் கைவண்ணம், கால்வண்ணம் கூறிப் புயவலியைப் புகழ் கிறார்.

"இராமன் சிவதனுசை நாணேற்று வானானால் சீதை தவம் செய்தவளாவாள் நான் இன்பம் பெறுவேன்" என்று சனகர் கூறுகிறார்.

---

* முதல் நூல் **கோசலைச் செல்வன்.** இரண்டாவது **மிதிலைச் செல்வி.** மூன்றாவதாக வெளிவரப் போகும் நூல் **வெற்றித் திருமணம்.** இதில், குலமுறை கிளத்துப் படலம் முதல் கடிமணப் படலம்வரை விரிவாகக் காண்க.

சதானந்த முனிவர் வில்லின் வரலாற்றையும் சீதையின் பெருமையையும் எடுத்துக் கூறுகிறார். உடனே இராமன் வில்லையெடுத்து நாணேற்றினான். அது இற்று விட்டது.

இது இவ்வாறாக நிகழ சீதை அங்கே காதலால் கலங்குகிறாள். இதே சமயம் வந்து சேர்ந்தாள் தோழி நீலமலை. வில் முறிந்த சேதி சொல்லி அவளை இன்பக்கடலில் ஆழ்த்தினாள். அடையாளத்தாலே தன் காதலனே வில்லை முறித்தவன் என்றறிந்தாள் சீதை.

விவாகம் நடத்தத் தீர்மானித்து தசரதருக்கு மண ஓலை அனுப்புகிறார் சனகர். தசரதர் மகிழ்ச்சியிலே திளைத்தார். சிற்றரசர்களும், மக்களும் சேனை வீரர்களும் புறப்பட்டனர். தசரதர் தம் பரிவாரங்களுடன் சந்திர சைலச் சாரலை யடைந்தார். அங்கே அனைவரும் தங்கி ஆனந்தமாகப் பொழுது போக்கினர். பின்னர் பிரயாணத்தைத் தொடர்ந்தனர். வழியிலே காதலர்கள் பேரின்பம் துய்த்தனர், மதுவுண்டனர், மகிழ்ந்தனர். பின் அனைவரும் கங்கைக் கரையை யடைந்தனர்.

தசரதருடைய ஜன சமுத்திரத்தை சனகருடைய ஜன சமுத்திரம் வரவேற்றது. சனகர் வரவேற்று மிதிலைக்கு அழைத்துச் சென்றார்.

இராமன் வீதியில் பரிவாரங்கள் சூழ பவனி வருகிறான். மாதர்கள் கண்டு அவன் அழகை அள்ளி அள்ளிப் பருகுகின்றனர்.

சீதையை நன்கு அலங்கரித்து சபா மண்டபத்துக்கு அழைத்து வந்தனர். காதலர் சந்தித்துப் பேரானந்தம் அடைந்தனர்.

கலியாண மண்டபம் மிகவும் உன்னத முறையில் அலங்கரிக்கப்பட்டது. அனைவரும் ஆசீர்வதிக்க திருமணம் இனிது நிகழ்ந்தது. த்சரதர் தமது பொருளை வேண்டியவர்கள் வேண்டியபடி வழங்கினார். சனகரும் அப்படியே. எங்கும் மகிழ்ச்சி. ஆனந்த மயம்.

சுபம்

# கோசலைச் செல்வன்

- **சென்னை ரேடியோ :** கம்பனின் பாடலின் சுவையை மக்களுக்கு ஊட்டவே இந்நூல் எழுந்துள்ளது. இந்நூலைப் படிப்போருக்கு கம்பன் காட்டும் அழகுகள் பல கண்ணெதிரே தோன்றும் என்பதில் ஐயமில்லை.

- **" வசந்தம் " :** இம்முயற்சியை எல்லோரும் வரவேற்பார்கள் என்பதில் சந்தேகமில்லை.

- **" கலைமகள் " :** எளிய இனிய நடையிலே கம்பன் கவிதையிலே வழங்கும் சொற்களையும் கலந்து விஷயங்களை விளக்கியிருப்பதோடு பாடல்களின் பொருளைக் கவிர்ச்சிதரும் முறையில் கோத்து அமைத்திருக்கிறார் ஆசிரியர்.

- **"செட்டிநாடு":** இனி எல்லோரும் தாராளமாகக் கம்பனைப் படித்து இன்புறலாம். புத்தகத்தைப் பார்த்தவுடனே எவரும் படித்துப் பார்க்க விரும்புவர். நடையோ மிக எளிது. நல்ல ஓட்டமும் உணர்ச்சியும் இனிமையும் கலந்தது.

- **" Sunday Times " :** The author sets out to lay bare to the reader the matchless beauties of Kambar's poesy in the simplest and most effective way. The book is a definite service to Tamil literature.

- **" தமிழன் " :** கம்பன் கவிச்சுவை பெருகி ஓடும் விரைவான நடையிலேயே இவரது விளக்கநடை வேகமாகச் செல்கிறது.

- **" சக்தி " :** கம்பனுடைய கோசலமா நகரம் ஓர் அரிய மனோராஜ்யம் ஆகும். அந்த மனோராஜ்யத்தைக் கம்பனின் பாக்கள் இடையிடையே விரவ, அழகான உரை நடையில் ஆசிரியர் சித்தரிக்கிறார். கம்பனைக் கற்க விரும்புவோர் இம் மாதிரி நூல்களைத் தொடக்கத்தில் படித்தால் அக்காரியம் மிக்க எளிதுபடும்.

● "நவயுவன்" : கோசலைச் செல்வன் ஒரு அரிய முயற்சி. தொகுத்தவரின் சாமர்த்தியம் இதில் சுடர்விட்டுப் பிரகாசிக்கிறது. அவரது இனிய எளியநடை நம்மை இழுத்துக் கொண்டே போகிறது.

● "சினிமா உலகம் :" இதை ஆசிரியரின் ஒரு அரிய தமிழ்த் தொண்டு என்றே சொல்லலாம்.

● "நவ சக்தி" : கம்பன் கவி நயத்தை எளிய முறையில் எல்லோரும் அறிந்து அனுபவிக்கக்கூடிய வகையில் அருமையாய் எடுத்துக்காட்டி யிருக்கிறார். கதை சொல்வதுபோலிருக்கிறது. இத்தகைய தொண்டுதான் தற்போது தமிழ் நாட்டுக்குத் தேவை.

● **கொழும்பு ரேடியோ :** கோசலைச் செல்வன் என்ற நூல் கம்பன் கவிச் சுவையில் ஈடுபட விரும்புவோர் படித்து மகிழ வேண்டியதொரு நூலாகும்.

● **"The Guardian" :** It is mostly written in the language of Kamban himself. The selection of stanzas from the Original is done with taste and discerment.

● **திருச்சி ரேடியோ :** கம்பர் உணர்ச்சி ததும்பி வரும் தமிழ்நாட்டிலுள்ள ஏழைத் தமிழனும் கம்பன் கவிதையைச் சுவைத்து அனுபவிக்கத் தகுந்த புத்தகங்கள் குறைந்த விலையில் வரவேண்டும் என்ற பரந்த நோக்கத்தில் விளைந்தது கோசலைச் செல்வன்.

● "தினமணி" : கம்பநாட்டாழ்வான் வருணித்திருக்கும் பாக்களில் ரசமானவற்றைக் கோத்து கடும்பதங்களுக்கு உரையையும் எளியநடையில் பொழிப்புரையையும் எழுதியிருக்கிறார். தமிழ் இலக்கியத்திடத்தும் குறிப்பாகக் கம்பனின் கவிதையிலும் இவருக்கு ஏற்பட்டுள்ள பற்று இந்நூலில் பிரதி பலிக்கிறது.

● "பாரததேவி" : கம்பனைக் கண்டு மிரளவேண்டாம்: இதோ கம்பன் என்று கவியைப் பிடித்து நம்முன் நிறுத்துகிறார் ஆசிரியர் .

# கழக மலர்கள் இரண்டு

## கோசலைச் செல்வன்

### ஆசிரியர் : ப. நீலகண்டன்

கம்ப இராமாயணம் ஆரம்பம் முதல் இராமாவதாரம் வரை பொறுக்கி எடுத்த கவிகளுக்கு விளக்க உரையுடன், அமுதப் பிரவாகமான நடையில் எழுதப்பட்டது.

## இன்பப் பொழில்

### குறிப்பெடுத்து எழுதியவர் : ப. நீலகண்டன்

திருவாளர்கள் ரா. கிருஷ்ணமூர்த்தி (கல்கி), ரா. பி. சேதுப்பிள்ளை B.A., B.L., மகாமகோ பாத்தியாய - பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார், கவிராஜபண்டிதர் ஜெகவீர பாண்டியனர், ஆ. முத்துசிவம் B.A. (ஹானர்ஸ்), "குகப்ரியை", சுவாமி சித்பவா நந்தா ஆகியோரின் அரிய சொற்பொழிவுத்

— திரட்டு நூல் —

இரண்டும் தமிழ் மக்கள் படித்துப் படித்து இன்பம் அனுபவிக்கத் தகுந்த அரிய நூல்கள்.